# அம்ருதா

Amrudha Tamil Monthly

Volume 17 Issue 11 June 2023 Rs.25

ஆண்டு 17 இதழ் 11 ஜுன் 2023 ரூ.25




பிரபு திலக்
இந்திரா பார்த்தசாரதி
கயல்
கோபால் ராஜாராம்
அரவிந்தன்
இளங்கோ
பொ. கருணாகரமூர்த்தி
பா. கௌரி
விமலா ரமணி
ம.பெ. சீனிவாசன்
விட்டல்ராவ்
ஆர். வத்ஸலா

## தொ.மு.சி. ரகுநாதன்

# நூறாண்டு நினைவு

ஆண்டு 17 இதழ் 11

# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

ஜூன்-2023 விலை ரூ. 25



**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

* அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்

## இந்த இதழில்...

# மலக்குழி மரணம் எனும் சமூக அவலம்!

**பிரபு திலக்**

மலக்குழி மரணங்கள் குறித்த கவிதைக்காக கவிஞரும் திரைப்பட உதவி இயக்குநருமான விடுதலை சிகப்பி மீது ஐந்து பிரிவுகளில் வழக்குகள் பதிவு செய்யப்பட்டுள்ளது. ஒரு சமூக அவலம் மீதான அக்கறையிலும் ஆதங்கத்திலும் உருவான ஒரு படைப்பு மதப் பிரச்சினையாக்கப்பட்டுள்ளது. கடவுளாக இருந்தாலும், மலக்குழியில் இறங்கினால், அவர்களின் நிலை என்னவாகும் என்ற விடுதலை சிகப்பியின் கற்பனையை பொறுத்துக்கொள்ள முடியாதவர்கள், இத்தனை ஆயிரம் ஆண்டுகளாக மலக்குழியில் இறங்கி மரணமடையும் மனிதர்கள் குறித்து என்ன அக்கறை கொண்டிருந்திருக்கிறார்கள்?

கழிவு நீர் தொட்டியில் / பாதையில் இறங்கி சுத்தம் செய்யும் பணிகளில் மனிதர்களை ஈடுபடுத்துவது சட்டவிரோதம் என்றபோதும், இந்த ஆபத்தான / அறுவெறுப்பான சூழலில் பணிபுரியுமாறு மனிதர்கள் அனுப்பப்படுவதும் நச்சுவாயு தாக்கி அவர்கள் மரணம் அடைவதும் கடந்த பல ஆண்டுகளாகவே தொடர்ந்து வருகின்றன. இத்தகைய அவலங்களைத் தடுக்க மனிதக் கழிவுகளை மனிதர்களே அகற்றும் தடை சட்டத்தை முழுமையாக அமல்படுத்தவேண்டும் என்ற கோரிக்கைகள் அவ்வப்போது ஒலிக்கும். ஆனால், அது கண்டுகொள்ளப்படாமல் போவதே தொடர்ந்து நிகழ்கிறது என்பதையே சமீபத்தில் வெளியான புள்ளி விவரங்கள் வெளிப்படுத்துகின்றன.



கழிவு நீர் தொட்டிகள், சாக்கடைகளை சுத்தம் செய்யும்போது உயிரிழந்தவர்களின் எண்ணிக்கையில் இந்தியளவில் தமிழ்நாடுதான் முதலிடத்தில் உள்ளது என அண்மையில் மாநிலங்களவையில் ஒன்றிய அமைச்சர் ராமதாஸ் அத்வாலே தெரிவித்துள்ளது குறிப்பிடத்தக்கது. கல்வி, சுகாதாரம், பொருளாதாரம் உட்பட பல்வேறு நிலைகளில் இந்தியளவில் தமிழ்நாடு முன்னணியில் இருப்பதாக நாம் பெருமைப்பட்டுக்கொள்ளும் சூழ்நிலையில், மலக்குழி மரணங்களிலும் நாமே முன்னணியில் இருக்கிறோம் என்பது குறிப்பிடத்தக்கது.

மாநிலங்களவையில் ஒன்றிய அமைச்சர் ராமதாஸ் அத்வாலே தெரிவித்தபடி, இந்தியா முழுவதும், கடந்த 2018 முதல் 2022ஆம் ஆண்டு வரையிலான காலகட்டத்தில் சாக்கடை மற்றும் கழிவு நீர் தொட்டியை சுத்தம் செய்யும் போது 308 மரணங்கள் நிகழ்ந்துள்ளது. இதில் அதிகபட்சமாக தமிழ்நாட்டில் 52 பேரும் உத்தர பிரதேசத்தில் 46 பேரும் ஹரியானாவில் 40பேரும் மகாராஷ்டிராவில் 38 பேரும் டெல்லியில் 33 பேரும் கழிவுநீர் தொட்டி சுத்தம் செய்யும் பணியின்போது இறந்துள்ளனர்.



2018க்கு முந்தைய ஆண்டுகளிலும் இதுதான் நிலை. 2017ஆம் ஆண்டு இந்தியா முழுவதும் 92 பேர் உயிரிழந்தனர். இதில் தமிழ்நாட்டில் மட்டும் 7 பேர் உயிரிழந்துள்ளனர். இவை அதிகாரபூர்வமாக பதிவு செய்யப்பட்ட தகவலின் அடிப்படையிலான எண்ணிக்கைதான். பதிவு செய்யப்படாதவற்றையும் கவனத்தில் கொண்டால் இந்த எண்ணிக்கை கூடும் என்பதில் சந்தேகம் இல்லை.

தமிழ்நாட்டில் மரணம் அடைந்த அனைவரின் குடும்பத்துக்குமே தலா ரூ.10 லட்சம் இழப்பீடு தொகை வழங்கப்பட்டுள்ளது. மற்ற மாநிலங்களுடன் ஒப்பிடும்போது இழப்பீடு வழங்குவதில் தமிழ்நாடு அரசு விரைவாக செயல்பட்டிருந்தாலும், மலக்குழி மரணங்களை முழுமையாக தடுக்க நடவடிக்கை எடுக்கவில்லை என்பதைதான் இந்தத் தொடர் மரணங்கள் உணர்த்துகிறது.

இத்தனைக்கும் கழிவுநீர்த் தொட்டிகளை சுத்தம் செய்யும்போது பின்பற்ற வேண்டிய விதிகளை ஒன்றிய வீட்டு வசதி மற்றும் நகர்புற விவாகரத்துறை வழங்கியுள்ளது. இதில் இயந்திரங்களை பயன்படுத்திதான் கழிவுநீர்த் தொட்டிகைளை சுத்தம் செய்ய வேண்டும் என்றும், மனிதர்களைப் பயன்படுத்த கூடாது என்றும் கூறப்பட்டுள்ளது. அதையும் மீறி மனிதர்களைப் பயன்படுத்துவதால்தான் இதுபோன்ற மரணங்கள் ஏற்படுகின்றன.

இந்தியா சுதந்திரம் அடைந்து 46 வருடங்கள் கழித்து, 1993இல்தான் மனிதர்கள் மலம் அள்ளுவதை ஒட்டுமொத்தமாக தடைசெய்யும் சட்டம் அமலுக்கு வந்தது. ஆனால், அதனையும் நீர்த்துப் போகச் செய்யும் வகையில் 2013இல் இன்னொரு சட்டம் இயற்றப்பட்டது. அரசு பரிந்துரைக்கும் பாதுகாப்பு உபகரணங்கள் பயன்படுத்தினால் குறிப்பிட்ட சில சூழ்நிலைகளில் இந்தப் பணி அனுமதிக்கப்படலாம் என திருத்தப்பட்டது. அப்படியே முழுதும் இயந்திரங்களால் கழிவு அகற்றப்பட்டாலும் அவசரகால அடிப்படையில், இயந்திரங்களை பயன்படுத்த முடியாத சூழலில் மனிதர்கள் இதில் ஈடுபடலாம் என்றும் சேர்க்கப்பட்டது. மலம் அள்ளுவது என்று சொல்லாமல் 'ஆபத்தான தூய்மைப்பணி' என்றும் வரையறை செய்தது. மேலும் சுத்திகரிக்கப்பட்ட கழிவுகளுக்கு விலக்கு அளிக்கப்பட்டது ஆனால், எது சுத்திகரிக்கப்பட்ட கழிவு என்பது குறித்த சட்ட மற்றும் நடைமுறை தெளிவு இல்லை.

இது ஒரு மறைமுக ஒப்புதலை அளித்தது. நடைமுறை சிக்கல்களை மனதில் கொண்டு உருவாக்கப்பட்ட சட்ட மாற்றங்கள் இவை என விளக்கமளிக்கப்பட்டாலும், மனிதர்கள் மலம் அள்ளுவதை மறைமுகமாக தொடரவே இது வழிவகுத்தது. நடைமுறையில் இந்தப் பணியில் 50 ஆயிரத்துக்கும் மேற்பட்டோர் இன்னும் ஈடுபட்டு

வருவதற்கு காரணமானது.

தொடர் அழுத்தங்கள் காரணமாக இரண்டு வருடங்களுக்கு முன் மீண்டும் இந்த சட்டம் திருத்தப்பட்டது. நூறு சதவிகிதம் இயந்திரமயமாக்கல், மனிதர்களை மனிதக் கழிவு அகற்றும் பணி செய்ய நியமிப்போர் மீது வழக்கு தொடுக்கும் அதிகாரம் என மாற்றப்பட்டது. மரணம் விளைவிக்கக் கூடும் என்று தெரிந்தே ஆபத்தான பணியில் ஈடுபடுத்திய குற்றத்திற்காக, இதற்கு காரணமானவர்களுக்கு பத்து ஆண்டுகள் சிறைத் தண்டனையோ அபராதமோ விதிக்க இயலும்.

இன்னொரு பக்கம்... பட்டியல் சாதி மற்றும் பட்டியல் பழங்குடிகள் (வன்கொடுமைகள் தடுப்பு) சட்டம் 1989 பிரிவு 3 (1) (யி), பட்டியல் சாதி (அ) பழங்குடி அல்லாத ஒருவர் பட்டியல் சாதி (அ) பழங்குடியினரை கையால் கழிவுகளை அள்ள வைத்தல் அல்லது பணிக்கு அமர்த்துதல் அல்லது அவ்வாறு பணியமர்த்த அனுமதித்தல் ஆறு மாதங்களுக்குக் குறையாமல் ஐந்தாண்டுகள் வரை தண்டிக்கக்கூடிய குற்றம் என்கிறது. இச்சட்டத்தின் கீழான விதி 7, சிறப்பு அதிகாரம் பெற்ற துணைக் கண்காணிப்பாளர் மூலம் இத்தகைய சம்பவங்களில் விசாரணை நடத்த ஆவண செய்யவேண்டும் என்கிறது.

ஒவ்வொரு சம்பவம் நிகழும்போதும் கழிவுநீர் தொட்டி, கழிவு நீர் பாதையில் சுத்தம் செய்ய தனிநபரை நியமித்தால் கடும் நடவடிக்கை எடுக்கப்படும் என்று அரசும் அவ்வப்போது எச்சரிக்கும். கைகளால் மலம் அள்ளும் பணித்தடை மற்றும் மறுவாழ்வளித்தல் சட்டம் 2013இன்படி, தங்கள் வீடுகளிலுள்ள செப்டிக் டேங்க் மற்றும் கழிவு நீர் பாதையினுள் இறங்கி சுத்தம் செய்ய எந்தவொரு தனி நபரையும் நியமிப்பது சட்டவிரோதமானது மற்றும் தண்டணைக்குரிய குற்றமாகும் என்று

சென்னை மாநகராட்சி சார்பில் வெளியிட்டுள்ள ஒரு செய்திக் குறிப்பும் தெரிவிக்கிறது. மேலும், ஒரு கட்டிடத்தில் கழிவு நீர் தொட்டி அல்லது கழிவு நீர் பாதை சுத்தம் செய்யும் போது சுத்தம் செய்யும் நபர் மரணம் அடைந்தாலோ அல்லது விபத்து ஏற்பட்டாலோ வீட்டு உரிமையாளர் / கட்டிட உரிமையாளர்/ வாடகைக்கு குடியிருப்போர், நிறுவனம் மற்றும் ஒப்பந்ததாரரே பொறுப்பாவார்கள். சுத்தம் செய்யும் நபர் மரணம் அடைந்தால் கட்டிட உரிமையாளர்/ வாடகைக்கு குடியிருப்போர்/ ஒப்பந்ததாரர் மீது காவல்துறை வழக்கு பதிவு செய்து உரிய சட்ட நடவடிக்கை எடுக்கப்படும். இறந்தவரின் குடும்பத்தை சார்ந்த வாரிசுதாரர்களுக்கு ரூ.15 லட்சம் இழப்பீட்டுத் தொகையைச் செலுத்த வேண்டும். கழிவுநீர் பாதையும் தொட்டியும் இயந்திரங்கள் மூலமாக மட்டுமே சுத்தம் செய்யப்பட வேண்டும்.

மனிதர்கள் மூலம் கழிவு நீர் பாதை அடைப்பு அகற்றுவதை, கழிவு நீர் தொட்டிகள் சுத்தம் செய்வதை கண்டறிந்தால் உடனடியாக கட்டணமில்லா அழைப்பு எண் 14420இல் தொடர்புகொண்டு புகார் தெரிவிக்கலாம் எனவும் தெரிவிக்கப்பட்டுள்ளது.

அதன் பின்னும் பெரிய மாற்றம் இல்லை என்பதையே சமீப ஒன்றிய அமைச்சர் விவரங்கள் வெளிப்படுத்துகிறது.

பெரும்பாலும் என்ன நடக்கிறது? கவனக்குறைவால் மரணம் விளைவித்ததாக இந்திய தண்டனை சட்டம் பிரிவு 304கின் கீழ் முதல் தகவல் அறிக்கை பதிவு செய்யப்படுகிறது.

அறிவார்ந்த சமூகம் என பெருமைப்பட்டுக்கொள்ளும் நிலையில் மனிதக் கழிவுகளை மனிதனே அகற்றிடும் அவல சூழல் நிலவுவது வெட்கப்படத்தக்கது.

கழிவுநீர் தொட்டிகளை சுத்தம் செய்திட ரோபோக்கள் மற்றும் இயந்திரங்களை பயன்படுத்திட வேண்டும் என்ற கோரிக்கை நீண்ட நாட்களாக பெருவாரியாக எழுந்துகொண்டே இருக்கிறது. ஆனால் இன்னும் அதில் பெரிய முன்னேற்றம் இந்தியா முழுமைக்கும் எங்கும் ஏற்படவில்லை. இத்தனைக்கும், 2019 ஆம் அண்டிலேயே தமிழ்நாட்டில் தஞ்சாவூர் மாவட்டம், கும்பகோணம் முனிசிபாலிட்டியில் வெற்றிகரமாக ரோபோ பயன்படுத்தப்பட்டது. இந்தியன் ஆயில் கார்பரேசனால் இலவசமாக வழங்கப்பட்ட இந்த ரோபோவை வெற்றிகரமாக பயன்படுத்தியது மாவட்ட நிர்வாகம். ஒரு முன்னுதாரணம் இருந்தும் அதனை பின்பற்றாமல், பாதுகாப்பு உபகரணங்கள்கூட இல்லாமல்தான் மலக்குழிக்குள் மனிதர்கள் இன்னும் இறக்கப்படுகிறார்கள்.

முப்பது வருடங்களாக ஒரு சட்டம் நடைமுறையில் இருந்தும் ஒரு செயலை தடுக்க முடியவில்லை என்பதை, நம் அரசுகளின் ஒட்டுமொத்த தோல்வி என்பதோடு இந்திய மனநிலையின் பிரதிபலிப்பாகவும்தான் கொள்ள வேண்டும். இது ஒரு இழிவு என்ற உணர்வு நம் சமூகத்துக்கு இருந்திருக்குமானால் இது என்றோ மறைந்திருக்கும். இதன் பின் இருக்கும் சாதிய கட்டமைப்பும் மக்கள் மனநிலைகளும்தான் மாற்றம் நிகழ தடையாக உள்ளன எனபதை தனியே விளக்க வேண்டியதில்லை.

இந்நிலையில், தமிழ்நாடு முதலமைச்சர் மு.க. ஸ்டாலினின் சமீப உத்தரவு ஒன்று ஒரு நம்பிக்கையை விதைத்துள்ளது. கழிவுநீர்த் தொட்டிகள் மற்றும் பாதாளச் சாக்கடைகளில் ஏற்படும் இறப்புகளை தடுப்பதற்காக மேற்கொள்ளப்படும் நடவடிக்கைகள் குறித்து ஆய்வுக் கூட்டம் சமீபத்தில் நடைபெற்றது. இந்த கூட்டத்தில் பேசிய, தமிழ்நாடு முதலமைச்சர்



விடுதலை சிகப்பி

மு.க. ஸ்டாலின், “தமிழ்நாடு பல்வேறு சமூக பொருளாதார குறியீடுகளில் வளர்ச்சி பெற்ற மாநிலமாக இருந்தாலும், ஒரு குறியீட்டில் மட்டும் பின்தங்கிய நிலையில் உள்ளது. அது என்னவென்றால், கழிவு நீர்த் தொட்டிகளைச் சுத்திகரிக்கும்போது, உயிரிழக்கும் நபர்களின் எண்ணிக்கைதான். அதனைத் தவிர்க்க வேண்டிய கடமையும் பொறுப்பும் இந்த அரசுக்கு உள்ளது. தமிழ்நாட்டில், தொழில் துறை, தகவல் தொழில்நுட்பத் துறை உள்ளிட்ட பல்வேறு துறைகளில் நாம் முன்னணியில் இருக்கிறோம். அப்படியிருக்கும்போது, நம்மால் ஏன் இந்த அவலநிலையை மாற்ற முடியவில்லை என்பதை நாம் சற்றே சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

பாதாளச் சாக்கடைகளையும் கழிவுநீர்த் தொட்டிகளையும் மனிதர்களே சுத்தம் செய்யும் நடைமுறை மானுடத்திற்கே களங்கமாய் விளங்குகிறது. கழிவுநீர்த் தொட்டிகளை சுத்திகரிக்கும் பணியில் ஈடுபட்டிருந்தபோது உயிரிழந்தவர்களின் விவரங்களை சமீபத்தில் ஆய்வு செய்தேன். இத்தகைய இறப்புகள் பெரும்பாலும் நகரப் பகுதிகளில் நடைபெறுகின்றன. கழிவுநீர் தொட்டிகளை சுத்தம் செய்யும்போது அப்பணியாளர்கள் உயிரிழக்கும் நிலையை மாற்றுவதற்காக, சென்னை பெருநகரப் பகுதியில் நவீன இயந்திரங்களையும் கருவிகளையும் பயன்படுத்தி, தூய்மைப் பணியாளர்களைத் தொழில்முனைவோர்களாக மாற்றி, கழிவுநீர்த் தொட்டிகளை சுத்தம் செய்யும் பணியில் ஈடுபடுத்தத் திட்டமிடப்பட்டுள்ளது. இந்தத்திட்டத்தினை அடுத்த நான்கு மாதங்களில் முழுமையாக செயல்பாட்டிற்குக் கொண்டு வரவேண்டும் என்று நகராட்சி நிர்வாகத் துறை கூடுதல் தலைமைச் செயலாளர் அவர்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

மேலும், இந்தப்புதியதிட்டத்திற்காகக்காத்திராமல், இனிமேல் தமிழ்நாட்டில் எந்தவொரு இறப்பும் கழிவுநீர் சுத்திகரிப்பால் நேரக்கூடாது என்பதை மனதில் கொண்டு, நகராட்சி நிர்வாகத் துறை, ஊரக வளர்ச்சி மற்றும் ஊராட்சித் துறை, பேரூராட்சித் துறை அலுவலர்கள் செயல்பட வேண்டும். இதுபோன்ற நிகழ்வுகளால் உயிரிழப்புகளுக்கான இழப்பீடு வழங்குவதிலும் குற்றவியல் நடவடிக்கைகளிலும் வேறுபாடுகள் காணப்படுகிறது. சில இனங்களில் இந்தியத்தண்டனைச்சட்டப்பிரிவுகளில், முதல் தகவல் அறிக்கை பதிவு செய்யப்பட்டுள்ளது. இன்னும் சில இனங்களில் Prohibition of Employment of Manual Scavengers Act சட்டத்தின் கீழ் வழக்கு பதிவு செய்யப்பட்டுள்ளது. இவற்றையெல்லாம் பார்க்கும்போது, இதுபோன்ற உயிரிழப்புகள் நிகழும்போது, அவற்றை எப்படி கையாளவேண்டும், என்னென்ன நடவடிக்கைகள் உடனடியாக எடுக்கப்படவேண்டும் என்பதற்கு ஒரு நெறிமுறை வகுக்கப்படவில்லை என்பது தெரிகிறது.

இந்த இறப்புகளைத் தவிர்க்கும்பொருட்டு, விரைவில் முறையான வழிகாட்டு நெறிமுறைகளை வகுக்க வேண்டுமென்று, கூடுதல் தலைமைச் செயலாளர், நகராட்சி நிர்வாகம் மற்றும் குடிநீர் வழங்கல் துறை அவர்களைக் கேட்டுக் கொள்கிறேன். மேலும், இந்தப் பணியில் ஈடுபடுபவர்களிடமும் இப்பணியில் தூய்மைப் பணியாளர்களை ஈடுபடுத்துவோர்களிடமும், என்னென்ன பாதுகாப்பு நடவடிக்கைகளைக் கடைபிடிக்க வேண்டுமென்று ஒரு விழிப்புணர்வை ஏற்படுத்த வேண்டும்.

இனி வருங்காலங்களில், தக்க முன்னெச்சரிக்கை நடவடிக்கைகளை எடுக்கத் தவறி, அதன் வாயிலாக, இறப்புகள் நேருமானால் அதற்குக் காரணமான அலுவலர்கள் மீது கடுமையான நடவடிக்கை எடுக்கப்படும்“ எனக் கூறியுள்ளார்.

மனிதர்களை மனிதர்களே இழுத்துச் செல்லும் கை ரிக்ஷா வழக்கம் இந்தியாவின் சில மாநிலங்களில் இன்னும் உள்ள நிலையில், 1973லேயே தமிழ்நாட்டில் அதைத் தடை செய்தவர் கலைஞர் கருணாநிதி. இதற்காக வரலாறு எப்போதும் அவரை நினைவில் வைத்திருக்கும். இதுபோல், மனித மலத்தை மனிதர்களே அகற்றும் முறையை மு.க. ஸ்டாலின் ஒழித்தால், வரலாற்றில் நிச்சயம் நினைவுகூறப்படுவார்.●

# மனித முகம்

## இந்திரா பார்த்தசாரதி

நான் போலந்து வார்ஸாவில் இருந்த போது (1981-1986) எனக்கேற்பட்ட மறக்க முடியாத அனுபவங்களில் இதுவுமொன்று. ஒரு கிராமத்துக்குச் சென்ற அனுபவம். அப்பொழுது ராணுவ ஆட்சியின் உச்ச நிலை.

வார்ஸாவிலிருந்து ஆறு மணி பேருந்துப் பயணத்தில், கோனின் என்ற ஒரு கிராமம். அது வார்த நதிக்கருகே இருந்தது. அந்தக் கிராமத்தின் சிறப்பு என்னவென்றால், மத்திய நூற்றாண்டுகளில், ஒரு போலந்து கிராமம் எப்படி இருந்திருக்குமோ, அதை எடுத்துக்காட்டும் ஒரு தொல் பொருள் அருங்காட்சியகமாக, அரசாங்கம் அதை வைத்திருந்ததுதான்.

அந்தக் கிராமத்தை நானும் என் மனைவியும் பார்க்கவேண்டுமென்று. என் மாணவிகள் யோசனை சொன்னார்கள். நான்கு மாணவிகள் கூட வருவதாகச் சொன்னார்கள்.

அந்தக் கிராமத்தை ஒட்டியிருந்த ஒரு சிறிய நகரத்தில் இறங்கினோம். நவீனக் காலத்து வாடை அடிக்கக் கூடாதென்பதற்காக, அந்தக் கிராமத்துள் காரோ பஸ்ஸோ எதுவும் வரக் கூடாதென்ற தடை இருந்தது.

இரண்டு கிலோ மீட்டர் தூரம் நடந்து செல்வதென்ற ஏற்பாடு.

அந்தச்சிற்றூருக்குப்போய்இறங்கியதும், எங்களுக்கு ஏற்பாடாயிருந்த, ஒரு சிறிய விடுதியில், சிற்றுண்டி சாப்பிட்டுவிட்டு அந்தக் கிராமத்துக்குப் புறப்பட்டோம்.



அது குளிர் காலம். வானத்திலிருந்து பனிமலர்கள் கீழே விழுந்து கொண்டிருந்தன.

கிராம 'மியூஸியத்தைப் பார்க்க வந்தவர்கள் என் மனைவியைப் பார்த்துக் கொண்டேயிருந்தது எனக்கு ஆச்சர்யத்தைத் தரவில்லை. காரணம் அவள் உடை. காஞ்சிவரம் புடைவை, அதற்குமேல் ஓவர்கோட். நான் எவ்வளவு சொல்லியும் 'பாண்ட்' அணிய மறுத்துவிட்டாள்.

கிராமத்தைச் சென்றடைந்ததும், திடீரென்று பதினைந்தாம் நூற்றாண்டுக்குப் போய் விட்டாற் போல ஓருணர்வு. அந்தக் கிராமத்து வீடுகளில் இருந்தவர்கள், பதினைந்தாம் நூற்றாண்டு ஐரோப்பிய உடைகளில் இருந்தார்கள். குதிரைகளில் சிலர் சவாரி செய்து கொண்டிருந்தனர். அவர்கள் உடையைக் காட்டிலும் என் மனைவியின் உடைதான் அவர்களுக்கு அதிசியமாக இருந்திருக்கிறது!

கண்காட்சிக்காக வைக்கப்பட்டிருந்த மண்பாண்டங்கள், பெரிய பெரிய ஜாடிகள், அவற்றை நிர்வகிக்க அமர்த்தப்பட்டிருந்த இளைஞர்களும் மத்திய நூற்றாண்டுக் காலத்திய போலிஷ் மொழி பேசியதாக என் மாணவிகள் சொன்னார்கள்.

நாங்கள் எல்லாவற்றையும் பார்த்து விட்டு சிற்றூருக்குத் திரும்பி வந்த போது இளம் வெய்யில். வீதியிலிருந்த பனி மலர்கள் வெய்யிலில் இறுகிக் கண்ணாடி தோற்றத்துடன் இருந்தன. மிக எச்சரிக்கையுடன் நடக்க வேண்டும். இல்லாவிட்டால் வழுக்கி விடும்.

என் மனைவி வழுக்கிக் கீழே



விழுந்துவிட்டாள். நல்ல வேளை, நாங்கள் தங்கியிருந்த விடுதி அருகே இருந்தது.

அவளை கைத்தாங்கலாக அழைத்துச் சென்று உள்ளே கட்டிலில் படுக்க வைத்தோம். பொறுக்க முடியாத வலியினால் கஷ்டப்பட்டாள்.

ஒரு டாக்ஸியில், கிராமத்துக்கு அருகே இருந்த ஒரு சிற்றூரிலிருந்த மருத்துவமனைக்கு அழைத்துச் சென்றோம். நல்ல கூட்டம். அங்கிருந்த அந்த நகரத்து மக்கள் முதல் தடவையாகச் சேலை கட்டிய ஒரு பெண்ணை பார்த்திருக்க வேண்டுமென்றுமென்று தோன்றியது. 'ஜிப்ஸி'யா என்று என் மாணவிகளிடம் கேட்டார்கள். 'இந்துஸ்கா' (இந்தியப் பெண்மணி) என்று அவர்கள் பதில் சொன்னார்கள்.

போலந்தில் ஜிப்ஸிகள் இரண்டாம் உலகப் போருக்கு முன் நிறைய இருந்தார்களாம். அவர்களில் முக்கால்வாசிப் பேர்கள் ஹிட்லரின் 'காஸ்-சேம்பரில்' பலியானார்கள். அவர்கள் இந்தியாவிலிருந்து மத்திய நூற்றாண்டுகளில் ஐரோப்பாவுக்குச் சென்றதாகக் கூறப்படுகிறது. அவர்கள் நாடோடிகள். ஒரே இடத்தில் பல நாட்கள் தங்கமாட்டார்கள். அவர்கள் தங்களுக்குள் பேசிக்கொண்ட மொழியில் வடிவம் இழந்த ஹிந்துஸ்தானிச் சொற்கள் நிறைய இருக்கும். கறுப்பு முடி, கறுத்த கண்கள், நிறத்தில் மட்டும் ஐரோப்பியர்கள் மாதிரி இருப்பார்கள். போலிஷ் மக்கள் அவர்களுக்கு ஜோஸ்யம் தெரியுமென்று நம்பினார்கள்!

'இன்று நான் வி.ஐ.பி. பொறாமைப்படாதீர்கள்' என்றாள் என் மனைவி என்னிடம் வேதனையுடன் சிரித்துக்கொண்டே.

பரிசோதனையில் இடக் காலில் எலும்பு முறிவு என்று தெரிந்தது. 'இப்பொழுது தாற்காலிகமாக் கட்டுப் போடுகிறோம். வர்ஷாவா (வார்ஸா) போய் cast போட்டுக் கொள்ளுங்கள்' என்றார் அங்கிருந்த மருத்துவர்.

'உட்காரக் கூடாது படுக்கவைத்தே அழைத்துப் போங்கள்' என்றார் அந்த அழகிய பெண் டாக்டர்.

விடுதிக்குத் திரும்பி வந்தபோது இருட்டிவிட்டது வார்ஸவாவுக்கு விடியற்காலைதான் 'ட்ரெய்ன்'. பஸ்ஸில் என் மனைவியால் போக முடியாது. டாக்ஸியிலும் அதே பிரச்னைதான்.

என் மாணவி ஒருத்தி புகைவண்டிக்குப் பயணச் சீட்டுகள் வாங்கிக்கொண்டு வந்தாள்.

விடியற்காலை நாலு மணிக்கு வண்டி. ஸ்டேஷன் 3 கிலோமீட்டர் தூரத்திலிருந்தது. விடியற்காலை 2.33 மணிக்கு டாக்ஸி அழைத்து வர இரண்டு மாணவிகள் சென்றார்கள்.

அரை மணியாகியும் அவர்கள் திரும்பி வரவில்லை.

எங்களுக்கு ஒரே கவலையாக இருந்தது.

பத்து நிமிஷங்கள் கழித்து, வாசற்கதவு பலமாகத் தட்டப்படும் சப்தம் கேட்டது.

ஒரு மாணவி போய் திறந்தாள்.

டாக்ஸி கொண்டு வரப் போன இரண்டு பெண்களும் இரண்டு போலீஸ்காரரகளுடன் திரும்பி



வந்திருந்தார்கள்.

'என்ன பிரச்னை?' என்று கேட்டேன்.

'இப்பொழுது ராணுவ ஆட்சி அல்லவா? இரவு முழுவதும் ஊரடங்குச் சட்டம். யாரும் நடமாட முடியாது. எங்களை சாலிடாரிட்டி (அரசாங்க எதிர்ப்பு)இயக்கத்தைச் சேர்ந்தவர்களென்ற சந்தேகம் இவர்களுக்கு. ப்ரொஃபஸர் மனைவிக்கு காலில் எலும்பு முறிவு. உடனே வார்ஸா போக வேண்டும். ஸ்டேஷனுக்குப் போக டாக்ஸி தேடி வந்தோம் என்று சொன்னால் நம்ப மறுக்கிறார்கள். பானி (மேடம்) இந்திராவை 'பேஷண்டைப்' பார்க்க வேண்டுமென்றார்கள். அழைத்து வந்திருக்கிறோம்' என்றாள் ஒரு மாணவி.

அவர்களை உள்ளே நான் அழைத்துச் சென்றேன்.

கட்டிலில், பெரிய கட்டு போடப்பட்ட நிலையில் படுத்திருந்தாள் என் மனைவி.

அவளைச் சிறிது நேரம் உற்றுப் பார்த்தார்கள் அந்த போலிஸ் போலிஷ் இளைஞர்கள்.

பிறகு என் மாணவிகளிடம் போலிஷில் வேகமாக எதோ சொன்னர்கள். எனக்குப் புரியவில்லை.

நடாலியா (மாணவிகளில் ஒருத்தி) சொன்னாள்: 'வாசலில் போலீஸ் வான் இருக்கிறது. ஸ்ட்ரெச்சர் இருக்கிறது. வண்டியில் இன்னும் இரண்டு போலீஸ்காரர்கள் இருக்கிறார்கள். ஸ்டேஷனுக்கு உடன் வந்து, ட்ரெய்னில், ஏற்றிவிடுவதாகச் சொல்கிறார்கள். உங்களுக்கு ஆட்சேபணை இல்லையென்றால்.'

என் மனைவி அவர்களைப் பார்த்துப் புன்னகையுடன் 'ஜெங்குயியா(ங்)' என்றாள். ஜெங்குயாங் என்றால் போலிஷில் 'நன்றி' என்று அர்த்தம்.

இதை எதிர்பார்க்காத அந்தப் போலீஸ்காரர் களின் முகங்கள் மலர்ந்தன. இருவருக்கும் வயது, இருபத்தைந்துக்குள்தான் இருக்கும்.

உடனே அவர்கள் செயல்படத் தொடங்கினார்கள். 'ஸ்டெர்ச்சரை' எடுத்துக்கொண்டு வந்தான் ஒருவன். இன்னொருவன், 'ப்ளாஸ்கி'ல் தேநீர் கொண்டு வந்தான்.

'ட்ரெயினில்' ஏறியதும் என் மனைவி புன்னகையுடன் சொன்னாள்: 'கிராம மியூஸியத்தைப் பார்த்ததைக் காட்டிலும் இதுதான் நல்ல அனுபவம். இப்பொ எனக்கு வலியே தெரியலே. நம்மூர்லே இப்படி நடந்திருக்குமா?'

'ஒப்பிட்டுப் பேசாதே. நல்ல மனிதர்கள் இருக்கும் எல்லா இடத்திலும் நடக்கும்' என்றேன் நான்.

இந்திரா பார்த்தசாரதி
<parthasarathyindira@gmail.com>



World class service for Design & Construction of Precast Buildings
We thank all our customers for their trust & confidence endowed upon us. Its our mission to continually strive to provide cost-effective & high quality PRECAST products
European Technology
Modern Construction
TEEMAGE
PRECAST
4 PRECAST FACTORIES
15 CRANES + 2 tower cranes
50 LAKHS SQ.FT CONSTRUCTED
Class 1A contractor of CPWD, SPL class contractor in R&B Andhra,
executed precast construction for CRPF, NBCC, NPCIL, DMRC, ISRO
150 PROJECTS COMPLETED
350 ENGINEERS
2000 EMPLOYEES
School in Coimbatore
25,300 Sq.ft
completed within 60 days
Commercial Mall
2,25,000 Sq.ft
completed in 120days
Hostel Building
26,000 Sq.ft
completed in 70 days
Housing for CRPF
72 Days 1 Block
251 Houses 11 Months
EASIER
FASTER
BETTER
SERVICES OFFERED
• Design & Detailing
• Planning
• Production
• Transportation
• Erection
TYPES OF BUILDING
• Commercial
• Industrial
• Institutional
• Residential
• Multi level-Car Parking
TEEMAGE
Corporate Office :
6/35, College Road, 1st Cross Street, Tiruppur - 641 602.Tamilnadu. India. Ph : 0421 2240488.
4 Precast Factories Pan India
Coimbatore | Delhi | Hyderabad | Chennai
82204 55555, 82200 51777
email : sales@teemageprecast.in
marketingteemage@gmail.com
web : www.teemageprecast.in

# முயங்கொலிக் குறிப்புகள்

கயல்
ஓவியம்: நடேஷ்



## 14. புறக்கணித்தல்



கட்டிலில்
திரும்பிப் படுத்துக்கொள்ளுதல்
என்பது
எனக்கு எதிராக
எப்போதும்
நீ கைக்கொள்ளும் தந்திரம்.
என்
இறைஞ்சுதல்களால்
துளைக்கவே முடியாத கேடயம் அப்போதுன் இதயம்.

அதன் பக்கத்தில்
முயன்று முனை மழுங்கிச்
சரிந்து கிடக்கின்றன
காமனின் அநேகம் அம்புகள்.

எத்தனை நீவியும் சுருக்கம் கலையாத படுக்கை விரிப்பில்
பல்லாயிரம் முறை
நீ பரப்பிவைத்த அவமானப் பூக்கள்.

ஒரு கூடலுக்கான சமிக்ஞையை
எத்தனை முறைதான் எழுந்தெழுந்து பார்க்கும் என் இரவு?

நீயாகப் பின்னொருநாள் நெருங்குகையில்
அரவணைத்துக்கொள்ளத் தயங்காத
கரையைத் தவிர்த்துவிட்டு
அலட்சியப்படுத்திய
கடல் மடியையே மீண்டும் சேரும்
அலைபோல
தலையணையைப்
புறக்கணித்துவிட்டு
உன்னிடமே
தஞ்சமடைகிறேன்.



### 15. கள்ளச் சாவிகள்

காலை நடையில்
ஒரு செம்மார்ப்புக் குக்குறுவான்
பார்த்தேன்
என்றவாறே
அள்ளி மடியமர்த்திக்கொள்பவனின்
ஆவேச அணைப்பிற்குச் சிணுங்குகையில்
ஷமிலா என்று
காதோரம் முணுமுணுப்பான்.

நீரை முத்தமிடுகிற மீனாய்
உதடுகள் நீந்தித் திளைத்து
விழி கிறங்கி
காற்றைத் தேடிக் கைகள் பரவும்போது
அவன் அழைக்கும் பெயர்
சுஷ்மா.

சன்னி, மியா, அகிசா
மேடிசன், பிரியா ராவ் எனப்
பரவச மிகுதியில்
பலவாறு அவன் அழைக்கும்
என் பெயர்கள்
இன்னும் ஏராளமுண்டு.
இடையில் ஒருபோது
நான் திடுக்கிட
ஒலித்த பெயர்
என் தங்கையினது.



துடித்த மனதை அடக்கியபடி
உடனே
நொடிக்கும் குறைவான தருணத்தில்
நினைவில்வந்த ஏதோவொரு பெயரை
எதேச்சையாய் உச்சரிப்பது போல
என் உதடுகள் நழுவவிட
அவ்விரவில் இருந்துதான்
என் பெயர்
எனக்கு மறுபடியும் சொந்தமாயிற்று.

தொடரும்

**கயல்** <dr.kayalvizhi2020@gmail.com>

## தொ.மு.சி. ரகுநாதன்

# கருத்துப் போராளி!

முருகபூபதி

சமகாலம் எழுத்தாளரும் சமரசங்களுக்குட்படாத கருத்துப் போராளியுமான தொ.மு.சி. ரகுநாதன் என்ற தொ.மு. சிதம்பர ரகுநாதன் பிறந்த நூற்றாண்டு காலமாகும். 1923ஆம் ஆண்டு ஒக்டோபர் மாதம் 20ஆம் திகதி திருநெல்வேலியில் பிறந்த ரகுநாதன், 2001ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 31ஆம் திகதி, தமது 79ஆவது வயதில் திருநெல்வேலியில் மறைந்தார். எனக்கு உறவு முறையில் தாத்தாவானவர் ரகுநாதன்.

இறுதியாக 1990இல் திருநெல்வேலி பெருமாள்புரத்திலிருந்த அவரது இல்லத்திற்கு குடும்பத்தோடு விருந்தினராகச் சென்றேன். எனது அப்பாவின் வழியில் அவர் எனது நெருங்கிய உறவினர் என்பது எனக்கு எப்பொழுதும் பெருமை தரும் விஷயம். அவரது மருமகள் (மகனின் மனைவி) மாலதி ஹரீந்திரன் எனக்கு அண்ணி முறை. இந்த உறவு முறைகளுக்கெல்லாம் அப்பால் ரகுநாதனை நான் பெரிதும் மதிப்பதற்கு பல காரணங்கள் இருந்தன. அதனாலேயே அவரது மறைவின் பின்னர் எனது 'பறவைகள்' நாவலை அவருக்கே சமர்ப்பித்தேன்.

ரகுநாதன் குறித்து என்னால் சொல்லக்கூடியது இதுதான்:- 'ரகுநாதனது வாழ்க்கை சமரசங்களுக்குட்படாத ஒருவரின் துணிவு, உயிருள்ள எழுத்தாளர்களுக்கு ஒரு முன்னுதாரணம்.' புதுமைப்பித்தனின் நெருங்கிய சகாவான ரகுநாதன், "புதுமைப்பித்தனது வாழ்க்கை தமிழ் எழுத்தாளர் ஒருவரின் சோக நாடகம், உயிருள்ள எழுத்தாளர்களுக்கு ஒரு எச்சரிக்கை" என்று எழுதி எமக்கு பாடம் புகட்டியவர்.



சிறுகதை, நாவல், கவிதை, விமர்சனம், நாடகம், வாழ்க்கை வரலாறு, ஆய்வு, மொழிபெயர்ப்பு முதலான துறைகளில் பல நூல்களை வரவாக்கியிருப்பவர். இந்திய சாகித்திய அகடாமி விருது, சோவியத் லாண்ட் நேரு விருது உட்பட பல விருதுகளும் பெற்றவர். 'சாந்தி' என்ற இலக்கிய இதழை நடத்தியவர். இவ்விதழில்தான் ஜெயகாந்தன், சுந்தரராமசாமி ஆகியோரின் ஆரம்ப கால படைப்புகள் வெளியாகின. ரகுநாதன், இலக்கிய சர்ச்சைகளையும் உருவாக்கியவர்.

1956ஆம் ஆண்டில் நான் ஐந்து வயதுச் சிறுவன். இலங்கை முற்போக்கு எழுத்தாளர் சங்கம் நாடாளாவிய ரீதியில் பாரதி விழாக்களை நடத்தியபோது அதற்குப் பிரதம பேச்சாளராக ரகுநாதனை இலங்கைக்கு அழைத்திருந்தது. தமது பயணங்களின் நடுவே - நீர்கொழும்பில் எம்மையும் பார்ப்பதற்காக ஒரு இரவுப் பொழுதில் - சிலருடன் திடுதிப்பென காரில் வந்து இறங்கினார். எனக்கு அந்தச் சம்பவம் கனவாகவே நினைவில் பதிந்துள்ளது. உடன் வந்தவர்கள் யார் என்பதும் தெரியாது. அப்பா அச்சமயம் வெளியூர் போயிருந்தார்.

எவரிடமும் சொல்லிக்கொள்ளாமல் நண்பர்களுடன் படகில் புறப்பட்டு புத்தளத்தில் கரையிறங்கிய எனது அப்பா, மீண்டும் அதன் பின்னர் தமிழகம் செல்லாமலேயே நீர்கொழும்பில் 1983 ஆகஸ்டில் மறைந்தார்.

சொந்த பந்தங்களை துறந்து புறப்பட்டு வந்தவரை நேரில் பார்ப்பதற்காக வந்த அப்பாவின் மாமன் முறையான ரகுநாதன், அவரைப் பார்க்கச் சந்தர்ப்பம் கிடைக்காமல் ஏமாற்றத்துடன் திரும்பினார்



மீண்டும் 1983 முற்பகுதியில் இலங்கையில் இ.மு.எ.ச. பாரதி நூற்றாண்டை நாடாளவிய ரீதியில் நடத்திய பொழுது, ரகுநாதன், பேராசிரியர் ராமகிருஷ்ணன், ராஜம் கிருஷ்ணன் ஆகியோருடன் வந்திருந்தார். இச்சமயத்தில் நானும் எழுத்தாளனாக அறிமுகமாகயிருந்தேன். ரகுநாதனுடன் எனக்கு கடிதத் தொடர்புகளும் இருந்தன.

ரகுநாதனின் அண்ணன், தொ.மு. பாஸ்கரத் தொண்டமானும் எழுத்தாளர்தான். கல்கி கிருஷ்ணமூர்த்தி, இரசிகமணி டி.கே. சிதம்பரநாதன் ஆகியோரின் உற்ற நண்பர். அத்துடன் பாளையங்கோட்டையில் கலெக்டராகவும் (ஐ.ஏ.எஸ். அதிகாரி) பணியாற்றியவர். பாஸ்கரத் தொண்டமான் 1963இல் இலங்கை வந்த சமயம் எமது வீட்டுக்கு வந்த பொழுது அப்பா ஒரு பெரிய இராப்போசன விருந்தையே அவருக்காக ஏற்பாடு செய்திருந்தார்.

ரகுநாதன் மீண்டும் 1983இல் இலங்கை வந்தபோது, ஒரு எழுத்தாளன் என்ற உணர்வுக்கும் அப்பால் உறவினன் என்ற ரீதியில் உரையாடும் உறவாடும் வாய்ப்புக் கிட்டியது.

புதுமைப்பித்தன் இலக்கிய உலகில் எதிர்நோக்கிய சவால்களை வேறு உருவத்தில் வேறு வகையில் எதிர் நோக்கியவர் ரகுநாதன். வணிக நோக்கில் வெளியான இதழ்களில் ரகுநாதன் எழுதவில்லை. ஒருகட்டத்தில் சிற்றிதழ்களில் சிறுகதைகள் எழுதுவதை நிறுத்திவிட்டு, மொழிபெயர்ப்பு - பாரதி ஆய்வுகளில் தீவிரமாக ஈடுபட்டார். தமிழ்நாடு சோவியத்நாடு - தகவல் பிரிவு - ரகுநாதனின் இலக்கிய வேட்கையை சுரண்டி எடுத்ததோ என்று எண்ணுமளவுக்கு அவரது சிருஷ்டி இலக்கியங்கள் வெளியாகவில்லை.

எனினும், மக்ஸிம் கோர்க்கியின் 'தாய்' உட்பட பல சோவியத் இலக்கியங்களை அவர் தமிழுக்குத் தந்ததுடன் பாரதி இயல் ஆய்வாளராகவும் பரந்தளவில் அறியப்பட்டார். 'கங்கையும் காவிரியும் பாரதியும் ஷெல்லியும்', 'பாரதி: காலமும் கருத்தும்', 'பாரதியும் புரட்சி இயக்கமும்', 'பாரதி சில பார்வைகள்', 'பாஞ் சாலி சபதம் உறை பொருளும் மறை பொருளும்', 'இளங்கோவடிகள் யார்?', 'இலக்கிய விமர்சனம்' முதலானவை ரகுநாதன் எமக்கு விட்டுச் சென்றுள்ள அரிய நூல்கள்.

அவர் எழுதிய 'புதுமைப்பித்தன் வரலாறு' எமக்கெல்லாம் ஒரு பாடநூல். மூன்று பதிப்புகளைக் கண்ட இந்நூலின் மூன்றாவது பதிப்பில் - அனுபந்தமாக - சுந்தர ராமசாமியின் கேள்விகளுக்கு ரகுநாதன் அளித்த பதில்கள் பல பக்கங்களில் வெளியாகியுள்ளது.

காவிய இலக்கிய மாந்தர்களை புதிய சிந்தனையுடன் புதிய பார்வையுடன் எவருமே நினைத்துப் பார்த்திராத வடிவில் 'அகல்யை', 'சாபவிமோசனம்' முதலான கதைகளில் புதுமைப்பித்தன் சித்திரித்தது போன்று ரகுநாதனும் சில காவிய - புராண மாந்தர்களை முற்றிலும் புதிய கோணத்தில் வெளிப்படுத்தியிருக்கிறார்.

ரகுநாதனின் 'வென்றிலன் என்ற போதும்' என்ற கம்பராமாயணத் தொடரைத் தலைப்பாகக் கொண்ட கதையை டாக்டர் இரா.தண்டாயுதம், 'தமது தமிழ்ச் சிறுகதை' முன்னோடிகள் என்ற நூலில் சிலாகித்துக் குறிப்பிட்டுள்ளார். அதனை இங்கே அப்படியே தருகின்றேன்.

'ஐவருக்கும் நான் பத்தினியானேன். எனக்கு வாய்ந்த ஐந்து கணவர்களும் என்னிடம் நடந்துகொண்ட விதம்தான் என்னைக் கர்ணனைப் பற்றிய சிந்தனைக்கு மீண்டும் இழுத்துச் சென்றது. இந்த ஐவருக்கும் மேலாக கர்ணனிடம்தான் எனக்கு மனசு ஒட்டக்கூடிய பாசம் இருந்தது. தருமபுத்திரன் ஒரு ரிஷிப்பிறவி. அவருக்கு மனைவி என்றால் சதி என்ற தெய்வீகப் பொருள். அவர் பள்ளியறையில் வைத்துக்கொண்டுகூட, திடீரென்று நீதி சாஸ்திரம் போதிக்க ஆரம்பித்துவிடுவார். பீமரோ, காதலுக்கோ சல்லாபத்துக்கோ ஏற்றவரில்லை. இடும்பைதான் அவருக்குச் சரியான மனைவி. வில்லை முறித்து என்னை மணந்த அர்ஜுனனுக்கு நான் பலரில் ஒருத்தி, அவருக்கு சமயத்தில் ஒருத்தி வேண்டும். அது திரௌபதியானாலும் சுபத்திரையானாலும் ஒன்றுதான். நகுல, சகாதேவர்கள் என் கண்ணுக்கு கணவர்களாகவே தோன்றவில்லை. மதினியின் அன்பு அரவணைப்பில் ஒதுங்க எண்ணும் மைத்துனக் குஞ்சுகளாகத்தான் தோன்றினர். இதனால்தான் இந்த ஐவரில் எவர் மேலும் அன்பு செலுத்த முடியவில்லை. உலகமும் அவர்களும் என் பரிவையும் பச்சாதாபத்தையும் எப்படி வேண்டுமானாலும் அர்த்தப்படுத்திக் கொள்ளட்டும். எனினும் எனக்கு கர்ணன் மேல்தான் நேர்மையான அன்பு படர்ந்திருந்தது. கர்ணன் நினைவுதான் என் இளமையைக் கூடக் கட்டுக்குலைக்காமல் காத்து வந்தது.

இன்று கர்ணன் மடிந்தார். அப்படியானால் ஒட்டிக்கொண்டிருந்த என் வாழ்க்கைக் கனவும் இன்றோடு உதிர்ந்தது என்றுதான் கொள்ள வேண்டுமா...?'

கர்ணனுக்கு அர்ஜுனனுக்கும் போர் நடந்து கர்ணன் தோற்று இறந்தும் விட்டான் என்று கேள்விப்படும் பாஞ்சாலி இப்படி நினைப்பதாக உங்களால் கற்பனையாவது செய்துபார்க்க முடியுமா? இல்லை, "குந்தியின் பாவம், திரௌபதியின் காதல், அர்ஜுனனின் கர்வம், தருமனின் மடமை, சூரியனின் கயமை - எல்லாம் கர்ணனின் மரணத்தோடு மாய வேண்டியவைதான்" என்று எண்ணும் கண்ணனைத்தான் கற்பனை செய்ய முடியுமா?

என்றெல்லாம் இரா. தண்டாயுதம் கேள்விகள் எழுப்பி ரகுநாதனின் இந்த 'வென்றிலன் என்ற போதும்' சிறுகதையை அரியதொரு படைப்பு என்று புகழாரம் சூட்டுகிறார்.

பாரதிக்கும் பாஞ்சாலியிடத்தில் பரிவு இருந்தது. அதனால் 'பாஞ்சாலி சபதம்' எமக்கு கிடைத்தது. ரகுநாதனுக்கும் இந்த பாஞ்சாலி மீது பச்சாதாபம் இருந்திருக்க வேண்டும். அதனால், 'வென்றிலன் என்ற போதும்' எழுதியதுடன் நில்லாமல், 'பாஞ்சாலி சபதம் உறைபொருளும் மறை பொருளும்' என்ற தலைப்பில் 1987இல் அண்ணாமலை பல்கலைக்கழகத்தில் விரிவான சொற்பொழிவாற்றினார். பின்னர் இது நூலாக வெளிவந்தது.

ரகுநாதனின் கதைகளை திறனாய்வு செய்துள்ள தண்டாயுதம் இரண்டு வகையில் அவரைப் பிரித்துப் பார்ப்பதற்கு நியாயங்கள் இருந்தன. ஆரம்பகாலக் கதைகளில் ரகுநாதன் கலைஞராக மிளிர்ந்ததாகவும் பின்னர் கொள்கையாளராக இருந்தே சிறுகதைகளைப் படைத்திருப்பதாகவும் தண்டாயுதம் சொல்வதில் உண்மை இருக்கிறது.

மில் தொழிலாளர்களை பாத்திரங்களாக படைத்து ரகுநாதன் எழுதிய 'நீயும் நானும்' என்ற சிறுகதையை படித்துவிட்டு அவருக்கு கடிதம் எழுதியிருக்கிறேன். அது நான் எழுத ஆரம்பித்த காலப்பகுதி. ஆனால், ரகுநாதன் எனக்கு பதில் எழுதவில்லை. தமது பிள்ளைகளின் திருமண அழைப்பிதழையே அனுப்பியிருந்தார். எனக்கும் ஏனையவர்களைப் போன்று அக்கதை குறித்து விமர்சனம் இருந்தது. ஜெயகாந்தனும் இது பற்றி கடுமையாக எழுதினார். முற்போக்கு எழுத்தாளர் மத்தியிலும் இக்கதை கண்டனத்திற்குள்ளானது.

நீண்ட இடைவெளிக்குப் பின்பு ரகுநாதனுடன் முதல் தடவையாக மட்டக்களப்புக்கு இரவு ரயிலில் பயணமானபொழுது நான், "அந்த 'நீயும் நானும்' என்ற கதை தொடர்பாக உங்களுக்கு எழுதியிருந்தேனே... ஏன் அது பற்றி மூச்சே காட்டவில்லை" என்றேன்.

ரகுநாதன் சிரித்தார்.

தனக்கும் அந்தக் கதை குறித்து உடன்பாடு இல்லை. ஒரு வகையில் வரட்டுத்தனமான கொள்கையின் வெளிப்பாடு. அவ்வாறு எழுதியது தவறுதான் என்று ஒப்புக்கொண்டதுடன் சில போர்க்கால கதைகளை எனக்குச் சொன்னார்.

ரகுநாதனின் மகன் ஹரீந்திரனின் மனைவி மாலதியும் எழுத்தாளர்தான். மாமனார் புதுக்கவிதைக்கு எதிரியாக இருந்தார். மருமகள் மாலதியோ புதுக்கவிதை எழுதும் படைப்பாளி. மாலதி, திருநெல்வேலியில் சாராள் தக்கர் கல்லூரியில் பேராசிரியராகப் பணியாற்றியவர். 'எண்ணக்கோடுகள்' என்ற இவரது புதுக்கவிதை நூலுக்கு அணிந்துரை எழுதியவர் கவியரசு கண்ணதாசன். 1978இல் இது வெளியான பொழுது கண்ணதாசன் தமிழக அரசின் ஆஸ்தான கவிஞராக இருந்தார். ரகுநாதன், தமது மருமகளின் இக்கவிதை நூல் குறித்து எந்தக் கருத்தும் வெளியிடவில்லை.




மாலதியின் கவிதைகள் 'கண்ணதாசன்', 'தீபம்', 'தாமரை' முதலான இதழ்களில் வெளிவந்தன. புதுக்கவிதை எதிர்ப்பாளரான ரகுநாதன், மருமகளின் நூல் குறித்து அபிப்பிராயம் எதுவும் தெரிவிக்காதமை வியப்பன்று. ஆனால், மாலதி தமது பட்டப்படிப்பிற்காக ரகுநாதனின் எழுத்துக்களையே ஆய்வுக்கு எடுத்துக்கொண்டார்.

'ஆனந்த விகடன்' இதுபற்றி குறிப்பிடும் பொழுது- "வழக்கமாக மாமனார்தான் மருமகளை ஆராய்ந்து தெரிவு செய்வார். ஆனால், இங்கே ஒரு மருமகளே தமது மாமனாரை ஆராய்ச்சி செய்து எழுத முன்வந்துள்ளார்" எனக் குறிப்பிட்டது.

1951இல் புதுமைப்பித்தன் வாழ்க்கை வரலாற்றை எழுதிய ரகுநாதன், கோமல் சாமிநாதனின் 'சுபமங்களா' இதழில் 1992இல் புதுமைப்பித்தன் குறித்து சர்ச்சை எழுந்த போது வெகுண்டெழுந்தார். புதுமைப்பித்தன் மேலைநாட்டு இலக்கிய கர்த்தாக்களின் படைப்புக்களை என்றைக்குமே தமிழில் எழுதியதில்லை என்பதை ஆதாரங்களுடன் நிரூபிக்க 'சுபமங்களா' செப்டம்பர், அக்டோபர் - 1992 இதழ்களை நன்கு பயன்படுத்தினார்.

பின்னர் 'புதுமைப்பித்தன் சில விமர்சனங்களும் விஷமத்தனங்களும்' என்ற நூலை விரிவாக எழுதினார். இதனை சென்னை நியூசெஞ்சரி புக் ஹவுஸ் வெளியிட்டது. செல்லப்பா, சிட்டி, கண. முத்தையா உட்பட பலரை ரகுநாதன் இந்த நூலில் விமர்சித்திருந்தார்.

ரகுநாதன் தமது இறுதிக் காலத்திற்கு சற்று முன்பாக சிலப்பதிகார ஆராய்ச்சியிலும் திருக்குறள் ஆராய்ச்சியிலும் தீவிரமாக ஈடுபட்டவர். 'இளங்கோவடிகள் யார்' - என்ற இவரது விரிவான நூல் வெளியாகுமுன்பே, அது குறித்து என்னிடம் பிரஸ்தாபித்தார். 1984இல் ஏப்ரல் மாதம் சென்னையில் அவரைச் சந்தித்த போது அவர் வீட்டிலிருந்து இந்த நூலையே எழுதிக் கொண்டிருந்தார். அது வெளியானதன் பின்பு அது குறித்து விரிவான விமர்சனம் எழுதியவர் எங்கள் இலங்கைப் பேராசிரியர் எம்.ஏ. நுஃமான். அந்த நூலை 1990இல் திருநெல்வேலியில் பெருமாள்புரத்தில் ரகுநாதன் இருந்த பொழுது எனக்கு காண்பித்தார்.

இறுதியாக 1990 ஏப்ரல் மாதம் ரகுநாதனின் துணைவியார் ரஞ்சிதம் அவர்கள் உணவு பரிமாற ஒன்றாக அமர்ந்து மதிய விருந்துண்டேன். இதுவே இறுதிச் சந்திப்பு.

'இளங்கோவடிகள் யார்?' என்ற ரகுநாதனின் நூல் எண்ணூறு பக்கங்களை கொண்டது. சிலப்பதிகாரம் தொடர்பாக காலம் காலமாகப் பேசப்பட்டுவந்த கதைகளுக்கு எதிர்வினையாகவும் இந்த நூல் பேசப்பட்டது. 'சிலப்பதிகாரம் பற்றி மரபுவழியான கருத்துப் படிமங்களை தகர்த்தெறிந்த நூல்தான் இளங்கோவடிகள் யார்? என்ற ஆய்வு நூல்' என்று பேராசிரியர் எஸ். தோதாத்திரி எழுதியுள்ளார்.

தமிழ்நாடு திருநெல்வேலி பிரதேசத்தில் வாழ்ந்த கைத்தறி நெசவாளர்களின் போராட்ட வாழ்வை சித்திரித்த ரகுநாதனின் 'பஞ்சும் பசியும்' நாவல், செக் மொழியிலும் பெயர்க்கப்பட்டு, அந்த நாட்டில் அக்காலத்திலேயே ஐம்பதினாயிரம் பிரதிகளுக்கு மேல் விற்பனையாகியிருக்கிறது. 'பஞ்சும் பசியும்' காமிஸ்வலபில் என்ற புகழ்பெற்ற எழுத்தாளரினால் செக் மொழிக்கு மொழிபெயர்க்கப்பட்டது.

'பஞ்சும் பசியும்' நாவலை எமது இலங்கைப் பேராசிரியர் க. கைலாசபதி, தான் எழுதிய தமிழ் நாவல் இலக்கியம் நூலில் சோஷலிஸ யதார்த்தப் பார்வையுள்ள படைப்பு என சிலாகித்துள்ளார்.

ரகுநாதனின் பிறந்த நூற்றாண்டு இந்த ஆண்டு ஒக்டோபர் மாதத்திலிருந்து ஆரம்பமாகிறது.

முருகபூபதி <letchumananm@gmail.com>

# உலக நாடகங்களின் அறிமுக உரையாடல்

(அம்ருதாவில் வெளியான ஸிந்துஜாவின் 'நாடகமே உலகம்'
தொடர் நூலுக்கு எழுதப்பட்ட முன்னுரை)

**கோபால் ராஜாராம்**

பத்தாண்டுகளுக்கு முன்பு நண்பர் எஸ்.சாமிநாதன், அமெரிக்கா வந்திருந்தபோது நியூயார்க்கைச் சுற்றிப் பார்க்கச் சென்றிருந்தோம். அவ்வமயம் ப்ருக்ளின் மியூசிக் அகாதெமியில் ஹெரால்டு பிண்டரின் 'கேர்டேக்கர்' (தனி உதவியாளன் ) என்ற நாடகம் நிகழ்த்தப்பட்டுக் கொண்டிருந்தது. அதைப் பார்க்கப் பிரியப்பட்ட சாமிநாதனுடன் நான் சென்றேன். அது ஒரு தனி அனுபவம்.

ஹெரால்டு பிண்டரின் பாணி பெருத்த உரையாடல்களைக் கொண்டதல்ல. மிகக் குறுகிய, சிறிய உரையாடல்கள் மூலமாகக் கதாபாத்திரங்களின் தன்மையையும் சூழலையும் விளக்கமுடியும் என்பதன் உதாரணங்கள் அவருடைய நாடகங்கள். ஆனால், 'கேர்டேக்கர்' நாடகம் ஒரு சில நீண்ட உரையாடல்களைக் கொண்டது. காரணம், ஓர் உறவுமுறைகளின் படிநிலை காலப்போக்கில் எப்படி உருமாற்றம் கொண்டு தலைகீழாக ஆகிறது என்பதை சித்தரிக்கும் நாடகம் அது.

சாமிநாதன் சென்னையில் பிண்டரின் நாடகத்திற்கு உருக்கொடுக்க முயன்றதும், அதில் கொண்ட தடைகளும், புரியவில்லை என்ற குறிப்புடன் அது கைவிடப்பட்டதும் பற்றி உரையாடினார். தமிழ்நாட்டின் நவீன நாடக முயற்சிகளின் பிரச்சினைகள், சாதனைகள் பற்றி உரையாடல் தொடர்ந்தது.

ஸிந்துஜாவின் 'நாடகமே உலகம்' தொகுப்பைப் பார்க்கும்போது இன்றைய நவீன நாடகத்தின் முன்னெடுப்பு எப்படி இருக்கலாம், என்னென்ன புதிய திசைகளில் பயணிக்கலாம் என்ற நோக்கில் உரத்த சிந்தனையாகவும் தொகுப்பு உருவாகி யிருப்பதை உணரமுடிகிறது.



நாடகத்தின் பங்களிப்பின் நீட்சிதான் தமிழ் அரசியல் சமூக வரலாறு என்று சொல்ல வேண்டும். இது சற்று மிகைப்பட்ட அவதானிப்பு என்று தோன்றலாம். ஆனால், அதுதான் உண்மை. இந்திய சுதந்திரம் நோக்கிய போராட்டம் நாடகத்தின் துணை கொண்டிருந்தது. திராவிட இயக்கத்தின் தோற்றம், வளர்ச்சியில் பங்காற்றிய பலரும் நாடக இயக்கத்திலிருந்து அரசியல் உலகிற்குச் சென்றது மிக இயல்பாகவே நடந்தது. கடந்த ஐம்பதாண்டுகளில் தமிழ்நாட்டின் தலைவிதியை நிர்ணயித்த முதல்வர்கள் நாடகத்தில் தம் வாழ்க்கையைத் தொடங்கியவர்கள், அல்லது சினிமாவுடன் நாடகத்திலும் நேரடியாக ஈடுபட்டவர்கள். நாடக இயக்கங்களின் நேரடியான பாதிப்பு சமூகத்தின் கூட்டு மனநிலையின் பரிணாம வளர்ச்சிக்கு வித்திட்டு பாரதூரமான அரசியல் மாற்றங்களுக்கு வழி வகுத்தது.

சென்னை போன்ற பெருநகரங்கள் மட்டுமல்லாமல் கிராமங்கள், சிறு நகரங்கள் என்று பல ஊர்களில் நாடகங்கள் நிகழ்த்தப்பட்டுள்ளன. அவற்றின் தரம், இலக்கிய வீச்சு, நாடக இலக்கண பின்பற்றல் போன்றவை நிச்சயம் விவாதத்திற்கு உரியவைதான். ஆனால், சமூகக் கூட்டு மனமாற்றங்களும் அரசியல் மாற்றங்களும் வேறு தளத்திலானவை. மேடைப் பேச்சின் உரத்த குரலின் இன்னொரு வடிவமாகத் திராவிட இயக்க நாடகங்கள் செயல்பட்டன என்ற விமர்சனத்தில் உண்மை உண்டு. ஆனால், குறிக்கோள் நிறைவேற்றம் என்ற முறையில் திராவிட இயக்கத்தின் நாடக ஈடுபாடு மிக வெற்றிகரமான ஒன்று என்றுதான் சொல்ல வேண்டும்.

சென்னை பெருநகரமாய் உருவாகி வருகையில், பணி நிமித்தம் சென்னைக்குக் குடிபெயர்ந்தவர்கள் பெரும்பாலும் மேல்தட்டு மக்கள் என்பதால், அவர்களின் கலாசார வடிவங்கள் புதிதாய் எழுந்து வளர்ந்த மத்தியதர வர்க்கத்தின் ஆங்கில வாசிப்பினால் உருவாகி எழுந்தவை. நாடக



அறிமுகங்களும் அவ்வாறே ஆங்கில நாடகங்களின் பாதிப்பிலும் ஆங்கில உலகின் மேடை நகைச்சுவை வடிவங்களிலிருந்தும் பெறப்பட்டன. கேளிக்கை வடிவமாகவும் சினிமாவிற்கு முதற்படியாகவும் நாடகங்கள் கருதப்பட்டன. துணுக்குத் தோரணங்கள், வரலாறு, புராண மிகைப்படுத்தல்கள், பெண்களின் பாரம்பரிய சமூக ஸ்தானத்தைக் கேள்விக்கு உட்படுத்தாத சமூக நாடகங்கள் என்று பலவறாக உருவான நாடகங்கள் என்று சில வகைமைகள் உருவாயின. அவற்றை மீறியும் சில குறிப்பிடத்தக்க நாடகங்கள் நிச்சயமாக உருவாகின. தமிழ்நாட்டின் பின்னணியில் முக்கியத்துவம் அவற்றுக்கு உண்டு என்பது மறுக்க முடியாத உண்மை. ஆனால், இந்திய நாடக அரங்கில் வெளிப்பட்ட ஆளுமைகளுக்குச் சமதையான ஆளுமைகள் தமிழில் உருவாவதில் இருந்த சிக்கலின் பின்னணி, நம் நாடக எழுச்சி சினிமாவின் படிக்கல்லாக இருந்ததினால் இருக்கலாம். ஹிந்தியில் மோகன் ராகேஷ், மராத்தியில் விஜய் தேண்டுல்கர், வங்காளி மொழியில் பாதல் சர்க்கார், கன்னடத்தில் கிரிஷ்கர்னாட் என்று ஒரு சமகால நாடகாசிரியர்கள் உருவாகி முக்கியத்துவம் அடைந்த போது, இந்திரா பார்த்தசாரதி, ந. முத்துசாமி போன்றோர் தமிழில் முக்கிய நாடகாசிரியராய் உருவாயினர். அவர்களுடைய நாடகங்கள் பரவலாய்த் தமிழில் நிகழ்த்தப்படவில்லை.

தமிழில் பாதல் சர்க்கார் அறிமுகம், அதன் பின்பு நிகழ்ந்த நாடக முகாமம், அதன் முன்பும் பின்பும் நிகழ்ந்த தெரு நாடகங்கள்... அரங்கை நிராகரித்த அந்நாடகங்கள் நவீன தமிழ் நாடகத்தின் போக்கை நிர்ணயித்தது. நம் பாரம்பரிய நாடக வடிவங்களை விசாரணை செய்த ந. முத்துசாமியின் நாடகங்களும், நாடகப் பிரதிகளை உருவாக்குவது என்ற குறிக்கோளை முன்வைத்து வெளிவந்த ‘நாடகவெளி’ இதழும்கூட பெரும் பங்காற்றின.

ஸிந்துஜாவின் இந்தத் தொகுப்பை நம் தமிழ்

நாடக இயக்கத்தின் அடுத்தகட்டம் என்னவாக இருக்க வேண்டும் என்று சுட்டிக்காட்டுகிற ஒரு முயற்சியாக நான் காண்கின்றேன். பொதுவாக இப்படிப்பட்ட இலக்கிய அறிமுகங்களில் உள்ள பலவீனம், அமெரிக்க மற்றும் பிரிட்டிஷ் நாடக ஆசிரியர்களின் அறிமுகமாக மட்டும் இருக்கும். 'இறந்துபோன வெள்ளை ஆண்களை' மையப்படுத்திய இலக்கியப் போக்கு என்று விமர்சகர்கள் அதைக் குறிப்பிடுவதுண்டு. ஸிந்துஜாவின் இந்த நூல் அந்தப் பலவீனத்தை உடைத்து கறுப்பினப் பெண்மணி லின் நாட்டேஜ், பிரிட்டிஷ் பெண் நாடகாசிரியர் சாரா கேன், சீன நாடகாசிரியர் கா சிங்கிஜியான், அமெரிக்கக் கறுப்பினப் பெண் சூசன் லோரி பார்க்ஸ், நைஜீரியா நாட்டின் வோலே சோயிங்கா, டாரியோ போ என்ற இத்தாலிய நாடகாசிரியர் என்று பல நாடுகள் மற்றும் பின்னணியிலிருந்து, வேறுபட்ட அரசியல், சமூக நிலைப்பாடுகளைக் கொண்ட நாடகாசிரியர்களை அறிமுகம் செய்திருக்கிறது. இவர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதத்தில் சிறப்பான பங்களிப்பை அளித்தவர்கள்.

அறிமுகம் பெறும் நாடகாசிரியர்களின் பொதுப்போக்கு என்பது சிந்தனைக்குரியது. அமெரிக்க, பிரிட்டன் நாடகாசிரியர்கள் தனிமனித உறவுகளில் ஏற்படும் விரிசல்கள், முரண்பாடுகள், எதிர்பார்ப்புகள், எதிர்பார்ப்புகள் பொய்த்துப் போன பின்பு அதனால் ஏற்படும் மனச்சிக்கல்கள் என்று ஒரு தளத்தில் செயல்படுவதாகக் காணலாம். அதன் சமூக அழுத்தங்கள் பின்னணியில் கோடி காட்டப்பட்டிருக்கும். ஆனால், துல்லியமாக அதனை வர்ணிப்பதோ அல்லது சமூகப் பிரசினைகளின் நேரடியான எதிரொலியாகக் காண்பிப்பதோ மிக அரிது. அவர்களைப் பொறுத்தவரை நாடகத்தன்மை தனி மனித உரசல்களிலும் உறவுகளில் ஏற்படும் முரண்பாடுகளிலும் உருவாகி வெளிப்படுவது. ஆனால், கறுப்பின மக்களின் நாடகங்கள் நேரடியாக சமூகப் பிரச்சினைகளை முன்வைக்கின்றன. தனிமனித முரண்பாடுகளுக்குப் பின்னணியாய் இருக்கும் சமூக சக்திகளை, பாதிப்புகளை முன்வைக்கத் தயங்குவதில்லை. செக்ஸ், வன்முறையை சித்தரிக்கத் தயங்குவதில்லை. நாடக உருவாக்கத்தில் இருக்கும் எழுதா விதிகளை மாற்றியமைக்க இவர்கள் முனைகின்றனர். சமூகத்தில் இடம்பெற்ற எதையும் நாடகத்தில் சித்தரிக்க முடியும், சித்தரிக்க வேண்டும் என்பதைக் குறிக்கோளாகக் கொண்டு இயங்குகின்றனர். அவற்றை வெறும் அதிர்ச்சிக்காக என்று குறுக்கும் போக்கு உண்டுதான். ஆனால், தொடர்ந்த இயக்கத்தின் மூலம் கலாசாரப் பரப்பில் தம் இடத்தை இவர்கள் உறுதி செய்கிறார்கள். சீனாவின் கா சிங்கிஜியான், நைஜீரியாவின் வோலே சோயிங்காவிற்கும் இது பொருந்தும்.

கறுப்பின மக்களின் துயரத்திலிருந்து விலகிய பார்வையில் லின் நோட்டேஜ்-ஐப் புரிந்துகொள்ள


டென்னஸி வில்லியம்ஸ்

முடியாது. சீன அரசின் அடக்குமுறையையும் மக்கள் மீதான அழுத்தத்தையும் முன்வைக்காமல், தொடர்ந்து சிந்திக்காமல், சிங்கிஜியானைப் புரிந்துகொள்ள முடியாது. நகர் வாழ்க்கையில் சக மனிதனின் துயரங்களைப் புரிந்துகொள்ளாத ஜனத்திரளைப் பற்றிய விமர்சனத்தை விலக்கிவிட்டு பாதல் சர்க்காரைப் புரிந்துகொள்ள முடியாது. மானிடரின் உறவுகளில் ஏறபட்ட திரிபுகளையும் சொல்லடங்கிய வெளிப்பாடுகளையும் முன்வைக்காமல் பிண்டரின் மனிதர்களைப் புரிந்துகொள்ள முடியாது. ஆப்பிரிக்க மண்ணில் நிகழ்ந்த இனவெறி அரசுகளையும் அவற்றின் கொடுங்கோன்மையையும் முன்வைத்துப் பார்க்காமல் வோலே சோயிங்காவை நிகழ்த்துவதும் சாத்தியமில்லை. விற்பனையைப் பெருக்கு அல்லது செத்தொழி என்பதை தாரக மந்திரமாகக் கொண்ட ஒரு நுகர்வு மையச் சமூகத்தில் இயங்கும் மனிதனின் மன அழுத்தம், ஒரு தனிமனித சோகம் மட்டுமல்ல ஒரு சமூகத்தின் கூட்டுச்சோகம் என்ற உண்மையை உரத்துச் சொல்ல ஒரு ஆர்தர் மில்லர் தேவைப்படுகிறார். பிரெக்டின் தைர்யசக்தி அம்மா ஜெர்மனியின் போர்க்களத்தில் மட்டுமல்ல ஈழம், உக்ரேன் என்று எங்கு வேண்டுமானாலும் இருக்கலாம். அடிமைகளாய் இருந்து விடுபட்டாலும், அந்த வாழ்வின் எச்ச சொச்சங்களாய் இருக்கும் அடிமட்டத்தில் இருந்து வெளியேறி புது வாழ்வு நோக்கி அடியெடுத்து வைத்தாலும், பின்னடைவே வாழ்வாய் இருக்கும் கறுப்பின மக்களின் துயரத்தை உணரமல் லின் நோட்டேஜ் பற்றிப் புரிந்துகொள்ள முடியாது.

நேரடியாக மேற்கண்ட நாடகாசிரியர்களை அறிமுகம் செய்வித்த ஸிந்துஜா டென்னஸி வில்லியம்ஸ் என்ற அமெரிக்க நாடகாசிரியரை



தமிழகத்தில் நடைபெற்ற பாதல் சர்க்கார் பயிற்சிப் பட்டறை

அறிமுகப்படுத்த வேறு வழியைப் பயன்படுத்துகிறார். ‘பாரிஸ் ரிவ்யூ’ மிக மதிக்கத்தக்க இலக்கிய இதழ். அதில் வெளிவரும் நேர்காணல்கள் சிறப்பு வாய்ந்தவை. எழுத்தாளனின் உருவாக்கம், பரிணாம வளர்ச்சி, இளமைக்கால வாழ்வு எப்படி எழுத்தைச் செதுக்கியது, எழுத்தின் பின்னணிகள், போராட்டங்கள் போன்ற பல சரடுகளை முன் வைக்கிற நேர்காணல்கள் அவை. எழுத்தாளர்களின் உள்மனச் சிக்கல்களையும் இலக்கியப் படைப்பு உருவாக்குவதில் எழும் சவால்களையும் விரிவாக எழுத்தாளரே முன்வந்து ஆன்மாவைத் திறந்து காட்டுகிற தருணங்கள் அவை. அவ்வாறான ‘பாரிஸ் ரிவ்யூ’ நேர்காணல் மூலம், டென்னஸி வில்லியம்ஸின் வார்த்தைகளிலேயே அவரை அறிமுகம் செய்விக்கிறார் ஸிந்துஜா. டென்னஸி வில்லியம்ஸின் இளமைக்கால வாழ்க்கை, எழுத்தின் தொடக்கம், கொண்ட உறவுகள், நட்புகள், நாடக உருவாக்கத்திலும் மேடையேற்றத்திலும் சந்தித்த சவால்கள் என்று விரிவான ஒரு களம் நம் முன்பு காணக் கிடைக்கிறது.

டென்னஸி வில்லியம்ஸின் நேர்முகம் இந்த அவருடைய அறிமுக நூலை முழுமை செய்கிறது. தன் அறிமுகத்தைத் தானே செய்யும் முறையில் டென்னஸி வில்லியம்ஸ் தன் வாழ்க்கையின் சம்பவங்களையும் குடும்பத்தையும் பற்றி சொல்கிறார் என்பது இந்த அறிமுக நூலுக்குக் கனமான புதிய பரிமாணத்தை அளிக்கிறது.

டென்னஸி வில்லியம்ஸ் தன்னைப் பற்றிய பதிவுகளை மிக நேர்மையாய் முன் வைக்கிறார். தன்னைப் பற்றி நேர்மையாக பதிவு செய்யத் தயங்குகிறவர்கள் எப்படிப் படைப்புலகில் நேர்மையை வெளிப்படுத்த முடியும்? அவருடைய வாழ்க்கை அனுபவங்கள் எப்படி அவருடைய படைப்புகளுக்கு பின்புலமாகவும் உத்வேகமாகவும் இருந்தன என்று பதிவு செய்கிறார். தன்னுடைய அக்காவின் மனப் பிறழ்வு, தன்னுடைய மனம் பேதலித்த தருணங்கள், ஓரின ஈர்ப்பு, அவர் சந்தித்த மனிதர்களைப் பற்றிய அபிப்பிராயங்கள் எதையும் விட்டு வைக்கவில்லை. ‘கண்ணாடிச் சிறைக்கூண்டு’ எப்படி அவர் அக்காவின் வாழ்க்கையின் ஒரு பகுதி என்றும் கூறுகிறார். இதன் பொருள் அவர் படைப்புகள் அவருடைய வாழ்வின் ஆவணங்கள் என்பதல்ல. அப்படி எந்தப் படைப்பாளியும் சொல்லிக்கொள்ளவும் முடியாது.

டென்னஸி வில்லியம்ஸின் வாழ்க்கைப் பதிவு இங்கு தரப்படுவதால், பிற நாடகாசிரியர்களின் வரலாறையும் அணுகிப் படிக்க வாசகனையும் பார்வையாளனையும் தூண்டலாம். ஆனால், அது முக்கியம் அல்ல. படைப்புகளுக்குப் பின்னால் படைப்பாளியின் வாழ்க்கை ஏதோ ஒரு விதத்தில் பிரதிபலிக்கிறது என்பதை உணர்வதும் படைப்பு மனம் வாழ்விலிருந்து செதுக்கி அளிக்கும் சித்திரங்கள் வாழ்வின் வெறும் பிரதியெடுப்பு அல்ல, வாழ்க்கையின் ஒரு தனித்த பார்வையிலான குறுக்கு வெட்டுத் தோற்றம் என்று உணர்வதும் முக்கியம்.

புதிய பிரதிகளைக் கண்டடைவதுதான் நாடகத்தின் புதிய போக்குகளை உருவாக்கும். அந்த விதத்தில் இந்த அறிமுக நூல், நாடக ஆர்வலர்களிடையே இங்கு விவாதிக்கப்பட்ட நாடகாசிரியர்களின் நாடகப் பிரதிகளை மேற்கொண்டு, தமிழ் நாடக உலகில் புதிய வெளிச்சம் கொண்டுவந்தால் ஸிந்துஜாவின் உழைப்புக்குப் பொருள் சேர்க்கும்.

“கோபால் ராஜாராம்“ <gorajaram@yahoo.com>

# விருது

**அரவிந்தன்**
ஓவியம்: அபராஜிதன்

காலையில் எழுந்ததிலிருந்தே மனம் உற்சாகமாக இருந்தது. அலுவலகத்தில் என்னுடைய அணியைப் பாராட்டி விருதளிக்கிறார்கள். நிர்வாக இயக்குநரும் மனிதவள மேம்பாட்டுத் துறை மேலாளரும் எங்களைப் பாராட்டிப் பேசுவார்கள். அதற்கு முன்பு எங்களுடைய முயற்சிகள், திட்டங்கள் பற்றி நாங்கள் ஐவரும் ஆளுக்கு ஐந்து நிமிடம் பேச வாய்ப்புக் கிடைக்கும். சென்னை வெயிலைப் பொருட்படுத்தாமல் நாய்போல அலைந்ததற்கும் வெறும் அலைச்சலை மட்டும் நம்பாமல் திட்டமிட்டு வேலை செய்ததற்கும் கிடைக்கும் அங்கீகாரம் இது.

இதுவரை எத்தனையோ நிறுவனங்களுக்காக இப்படிப்பட்ட உழைப்பைக் கொடுத்திருக்கிறேன். உருப்படாத தயாரிப்புகள், சேவைகளையெல்லாம் தொண்டை வறளும் அளவிற்குப் பேசிப் பேசி விற்றிருக்கிறேன். விற்கும் சரக்கு பயனற்றது என்று தெரிந்தும் அதன் சிறப்புக்களை எடுத்துச் சொல்லக் கற்பனை வளம் அதிகம் வேண்டும். மனசுக்குள் துளிக்கூட எட்டிப் பார்க்காத சிரிப்பை உதட்டில் கொண்டுவரப் பெரும் மெனக்கெடல் வேண்டும். இல்லாத தன்னம்பிக்கையைக் குரலில் பிரதிபலிக்க அபாரமான நடிப்புத் திறன் வேண்டும். இத்தனைக்கும் பிறகு, “ப்ரோஷரைக் குடுத்துட்டுப் போங்க சார், தேவைப்படும்போது கூப்பிடுவோம்” என்ற பதில்தான் பெரும்பாலும் வரும். “விசிட்டிங் கார்டுல போன் நம்பர் இருக்குல்ல, கூப்பிடுறேன் சார்” என்பார்கள். “உங்க ப்ரோஷரை அட்டாச் பண்ணி மெயில் அனுப்புங்க, டீம்ல டிஸ்கஸ் பண்ணிட்டு சொல்றோம்” என்பார்கள். சொல்லும் விதத்திலிருந்தே அதுவே அவர்களுடனான கடைசி சந்திப்பு என்பது தெரிந்துவிடும். பிறகு எத்தனை முறைபோன் செய்தாலும் எடுக்கமாட்டார்கள். வேறு எண்ணிலிருந்து அழைத்தால் எடுத்துப் பேசிவிட்டு, “அதான் கூப்பிட்றோம்னு சொன்னேனே சார்” என்று வைத்துவிடுவார்கள். இப்படி மடியே இல்லாத மாடுகளிடம் பால் கறக்கும் முயற்சிகளால் நொந்துபோன எனக்கு இந்த நிறுவனம் பெரிய சொர்க்கமாக இருந்தது.


Illustration by
Vickram Narendran

இந்த சொர்க்கத்தில் நான் நுழைவதற்குக் காரணம் சிவா சார்தான். இன்றைக்குக் கூட்டத்திற்கு அவர் வருவாரா என்று தெரியவில்லை. இதுபோன்ற கூட்டங்கள், பொதுக்கேளிக்கைகள் எல்லாம் அவருக்குப் பிடிக்காது. இப்படிப்பட்ட இடங்களுக்கு வந்தாலும் ஒட்டாமல் விலகியே இருப்பார். மது அருந்தும் பழக்கம் உண்டு என்றாலும் பொது விருந்துகளில் அருந்தமாட்டார். ‘மது அருந்துதல் எனக்கு ரொம்பவும் பிடிக்கும். அதை அந்தரங்கமான செயலாகக் கருதுகிறேன். பெரும்பாலும் தனிமையில் அல்லது மனதுக்கு நெருக்கமான ஒருவருடன்தான் மது அருந்துவது எனக்குச் சாத்தியம்’ என்பார். அப்படிப்பட்டவர் ஒரே ஒருமுறை மது அருந்த என்னை அழைத்தபோது ரொம்பவும் பெருமையாக இருந்தது.

சிவா சார் உயர் நிர்வாகக் குழுவில் இல்லை. முக்கியமான முடிவுகளை எடுக்கும் இடத்தில் இல்லை. மனிதவளத் துறையில் மூத்த பொறுப்பொன்றில் இருக்கிறார். ஆனால், எம்.டி. உள்படப் பலரும் பல விஷயங்களில் அவரைக் கலந்தாலோசிப்பார்கள். இப்படிப்பட்டவர் மீது பொதுவாக எல்லோருக்கும் பொறாமை வர வேண்டும். குறிப்பாக மனிதவளத் துறை மேலாளருக்கு வந்திருக்க வேண்டும். ஆனால், வரவில்லை. இவர் தனக்குப் போட்டியாக வருவார் என்ற எண்ணமே யாருக்கும் வராது. இவரை எண்ணி யாரும் பதற்றமடைய வேண்டிய அவசியம் இருக்காது. அவரும் யாரைக் கண்டும் பதற்றமோ அச்சமோ கொள்ளமாட்டார். தன்னுடைய வேலையைத் தாண்டி வேறு எதிலும் தலையிடமாட்டார். தானாக வந்து யாராவது கேட்டாலொழிய எதைப் பற்றியும் தன் கருத்தைச் சொல்லமாட்டார். பெரிய படிப்பாளி என்பதால் பல விஷயங்களையும் அறிந்திருந்தாலும் யாரும் கேட்காமல் எந்த ஆலோசனையும் சொல்லமாட்டார். அந்த ஆலோசனையைக் கேட்பவர்கள் அதைப் பின்பற்றினார்களா என்று கவனிக்கவும் மாட்டார். ஓரளவு வசதியான பின்னணியைக்கொண்டவர். அவருடைய மனைவியும் நல்ல வேலையில் இருக்கிறார். ஒரே பையன் ஜே.கிருஷ்ணமூர்த்தி அறக்கட்டளை நடத்தும் பள்ளியில் படிக்கிறான். வேலை, சம்பளம், சம்பள உயர்வு, பதவி உயர்வு என்று எதிலும் ஆர்வம் காட்டமாட்டார். ஆனால், நிறுவனம் அவருடைய மதிப்பை, சரியாகச் சொன்னால் ஞானத்தை உணர்ந்து அவரை நல்ல நிலையில் வைத்திருக்கிறது. மனித வளம் என்பதன் பொருளை முழுமையாக உணர்ந்த அவர் பணியாளர்களின்



திறனையும் மனநிலையையும் மேம்படுத்துவதற்கான திட்டங்களை வகுத்துத் தந்துகொண்டே இருப்பார். அவற்றில் பலவற்றை மேலாளர் எடுத்துக்கொள்ள மாட்டார். அதுபற்றியும் அவர் அலட்டிக்கொள்ள மாட்டார்.

“அருமையான திட்டங்களை வீணடிக்கிறார்களே என்ற வருத்தம் இல்லையா” என்று ஒருமுறை கேட்டேன்.

“அப்படி வருத்தப்பட்டால் அந்தத் திட்டங்களை நான் சொந்தம் கொண்டாடுகிறேன் என்று அர்த்தம். உண்மையில் எதுவும் எனககுச் சொந்தமில்லை. நான் வியாசர், ஷேக்ஸ்பியர், ராமகிருஷ்ண பரமஹம்சர், ஜே. கிருஷ்ணமூர்த்தி, நீட்ஷே என்று பலரிடம் கற்றதைத்தான் கொடுக்கிறேன். இதில் நான் சொந்தம் கொண்டாட எதுவும் இல்லை. நிராகரிப்பதால் வருத்தமும் இல்லை. மனித நடத்தை, செயல்பாடு பற்றி யோசிப்பது எனக்குப் பிடிக்கும். அது என் வேலையாகவும் அமைந்துவிட்டதில் மகிழ்ச்சி. அவ்வளவுதான். அதற்கு மேல் ஒன்றுமில்லை.”

இதைக் கேட்கும்போது எனக்கு ஆச்சரியமாக இருந்தது. யோசித்துப் பார்க்கும்போது நியாயமாகவும் பட்டது. ஆனால், இன்றைய வணிக உலகில் எத்தனை பேரால் இப்படி இருக்க முடியும்? இப்படிப்பட்ட ஒருவர் எங்கள் அணியின் வேலைகளைப் பற்றிப் பாராட்டிப் பேசுவார் என்பதே எனக்கு உவகையளிப்பதாக இருந்தது. நிகழ்ச்சியில் சிவா சார், மனிதவளத் துறை மேலாளர் லாரன்ஸ் தங்கராஜ், எம்.டி. கார்த்திக் வாசுதேவன் ஆகிய மூவரும் பேசுவார்கள் என்ற செய்தி காற்றுவாக்கில் வந்தபோது உற்சாகம் பற்றிக்கொண்டது. எங்கள் ஐந்து பேருக்கும் ரொக்கப் பரிசுடன் ஒரு நினைவுப் பரிசும் உண்டு. நிகழ்ச்சிக்குப் பின் மதுபான விருந்தும் உண்டு. ஆனால், இவை எல்லாவற்றையும்விட சிவா சார் எங்களைப் பற்றிப் பேசுவார், அணித் தலைவனான என்னைப் பற்றியும் சொல்வார் என்ற நினைப்பே

மகிழ்ச்சியைத் தந்தது. கடினமான உழைப்பு இருந்தும் பெரிய வெற்றிகளோ அங்கீகாரங்களோ பெற்றிராத எனக்கு இது புதிய அனுபவம்.

இருப்பதிலேயே நல்ல உடையாக எடுத்து அணிந்துகொண்டேன். மதுபான விருந்தில் குடிக்கவே கூடாது என்று முடிவு செய்தேன். அப்படியே குடித்தாலும் சம்பிரதாயத்திற்காகச் சிறிதளவே குடிக்க வேண்டும் என்று நினைத்தேன். என்னுடைய பிரச்சினை எனக்குத் தெரியும். குடிக்க ஆரம்பித்தால் நிறுத்த முடியாது. குடிக்கக் குடிக்க வாய்க்கு வந்ததைப் பேச ஆரம்பித்துவிடுவேன். சூழலைப் பற்றிய கவனமெல்லாம் போய்விடும். கெட்ட வார்த்தைகள் சரளமாகக் கொட்டும். எதிரில் இருப்பவர்களின் மீதான மரியாதை காணாமல் போய்விடும். பழைய குப்பையை எல்லாம் கிளற ஆரம்பித்துவிடுவேன். யாராவது சமாதானப்படுத்த வந்தால், "நீ என்ன பெரிய யோக்கியனா" என்று அவரையும் வறுக்க ஆரம்பித்துவிடுவேன். மொத்தத்தில் அடி வாங்காமல் வீடு வந்து சேருவது கஷ்டம் என்ற நிலைக்குப் போய்விடுவேன். யாராவது இரண்டு பேர் வலுக்கட்டாயமாகக் கூட்டிவந்து அறையில் விட்டுப் போவார்கள். அடுத்த நாள் காலை ஒன்பது மணி வாக்கில் எழுந்திருக்கும் போது தலைவலி மண்டையைப் பிளக்கும். காபி சாப்பிட்டுவிட்டுக் குளியல் போட்ட பிறகுதான் முந்தைய இரவின் லீலைகள் மங்கலாக நினைவுக்கு வரும். நான் ரொம்ப கலாட்டா பண்ணிவிட்டேனா என்று சுரேஷுக்கு போன் செய்து கேட்டால் அவன் அசிங்க அசிங்கமாகத் திட்ட ஆரம்பித்துவிடுவான்.

இன்று அப்படி ஆகக் கூடாது. இன்றைய நிகழ்ச்சியின் நாயகன் நான்தான். அணியில் ஐந்து பேர் இருந்தாலும் அணித் தலைவன் என்ற முறையில் எனக்குக் கூடுதல் கவனமும் பாராட்டும் கிடைக்கும். மூளையைப் பயன்படுத்தாமல் வேலை செய்யும் மற்ற நான்கு பேரையும் நான் எப்படித் தேற்றினேன் என்பது எனக்குத்தான் தெரியும். சிவா சாரைப் போல நான் பெரிய அறிவாளி கிடையாது. ஆனால், அவர் படித்த சங்கதிகளை நானும் ஓரளவு படித்திருக்கிறேன். அவரோடு அடிக்கடி விவாதிப்பேன். அதில் கிடைக்கும் வெளிச்சம் இந்த நான்கு முட்டாள்களைக் கடைத்தேற்ற எனக்கு உதவியிருக்கிறது. சிந்தனை பெரும்பாலும் அவருடையதுதான் என்றாலும் ஆட்களுக்கு ஏற்றபடி அதைச் செயல்படுத்தியது நான்தான். இது எம்.டி.க்குத் தெரியாவிட்டாலும் லாரன்ஸுக்குத் தெரியாவிட்டாலும் சிவா சாருக்குத் தெரியும். அவர் பேசும்போது என்னைப் பற்றிச் சொல்லாமல் இருக்கமாட்டார். சிவா சார் பாராட்டினால் எம்.டி.யும் பாராட்டுவார். அதன் பிறகுதான் இந்தக் கம்பெனியில் இருக்கும் சும்பன்களுக்கெல்லாம் நான் வெறும் வாசு இல்லை என்பது புரியும். 40 வயதாகியும் கல்யாணம் ஆகாமல், வாழ்க்கையில் நிலைபெறாமல், பொருளாதார வலு இல்லாமல் இருக்கும் என்னைப் பற்றி அலுவலகத்தில் பலருக்கும் இளக்காரமான நினைப்பு இருப்பது எனக்குத் தெரியும். இள வயதைக் கடந்த ஒண்டிக்கட்டை என்பதாலேயே அலுவலகத்தில் பெண்கள் என்னிடம் நெருங்கிப் பழகமாட்டார்கள். நெருங்கினால் விண்ணப்பம் போட்டுவிடுவேனோ என்ற பயமாக இருக்கலாம்.

அப்படியும் செய்திருக்கிறேன். அதில் ஒருத்தி ரொம்பச் சின்னப் பெண். பெயர் ராதா. 22 வயது இருக்கும். அவள் என்னிடம் சிரித்துச் சிரித்துப் பேசுவதைப் பார்த்து ஏமாந்துவிட்டேன். மிகவிரைவில் மிக ஆழமான காதலாக என் மனதில் அவளைப் பற்றிய எண்ணம் வளர்ந்துவிட்டது. ஒருநாள் தனியாகச் சந்தித்து என் காதலைச் சொன்னபோது அவள் முகம் போன போக்கைக் கண்டு அவமானமாக இருந்தது. "சாரி சார், நீங்க இப்படிப்பட்ட எண்ணத்தோடு பழகுவீங்கன்னு எதிர்பாக்கல" எனறு சொல்லிவிட்டுப் பதிலுக்குக்கூடக் காத்திராமல் திரும்பிச் சென்றாள். அந்த அவமானத்திற்கு நடுவிலும் அவள் கண்களின் அழகையும் கழுத்துக்குக் கீழே அமைந்த வசீகரத்தையும் என்னால் ரசிக்காமல் இருக்க முடியவில்லை. அவள் எல்லோரிடமும் சிரித்துப் பழகுவதை அதன் பிறகுதான் கவனிக்க ஆரம்பித்தேன். ஆனால், என்னிடம் மட்டும் அப்படிப் பேசுவதை நிறுத்திக்கொண்டாள். தூரத்திலிருந்தே அவள் அழகை ரசித்துப் பொறுமுவதைத் தவிர வேறு வழியில்லை என்று ஆனது.

ராதா அதன் பிறகு அதிக நாட்கள் எங்கள் நிறுவனத்தில் நீடிக்கவில்லை. அது ஒருவிதத்தில் நிம்மதியாகவும் இருந்தது. அவளைப் பார்க்கும் போதெல்லாம் அவள் முக அழகும் உடலின் கட்டழகும் என்னைத் துன்புறுத்திக் கொண்டிருந்தன. வேறு யாருடனோ பேசும்போது கலீரென்று அவள் சிரிப்பது என் செவிகளில் நெருப்பை அள்ளிக் கொட்டுவதுபோல் இருந்தது. ராதா போனால் என்ன, அவள் அளவுக்கு இல்லாவிட்டாலும் கல்யாணம் ஆகாத கொஞ்சம் சுமாரான அழகிகள் இன்னும் இரண்டு பேர் இருக்கிறார்கள். அவர்களிடம் விண்ணப்பத்தை நீட்ட பயமாக இருக்கிறது. இன்றிரவு நிகழ்ச்சிக்குப் பிறகு அதற்கான வாய்ப்பு உருவாகலாம்.

லாரன்ஸ் தங்கராஜ் மேலாளராக இருந்தாலும் சிவா சாரின் மதிப்பு அவருக்குத் தெரியும். அவர் தனக்குப் போட்டியில்லை என்பதால் பொது இடங்களிலும் அவருக்கு மரியாதை தருவதில் லான்ஸுக்குச் சிக்கல் இல்லை. தான் எவ்வளவுதான் பேசினாலும் சிவா ஐந்து நிமிடப் பேச்சிலேயே அனைவரையும் கவர்ந்துவிடுவார் என்பது தெரிந்துதான் லாரன்ஸ் சுருக்கமாகப் பேசினார் என்று எனக்குத் தோன்றியது. என் கணிப்பு சரியாக இருந்தால் அவர் எடுத்த முடிவு சரியானதுதான். தன்னுடைய

உரையைக் கன சுருக்கமான அறிமுக உரையாக மாற்றிக்கொண்டார். மிகவும் சுருக்கமாக இருந்ததால் அதில் என்னைப் பற்றிச் சொல்லவில்லையே என்ற குறை எனக்குத் தோன்றவில்லை. நிறுவனத்திற்குப் பெரும் லாபம் பெற்றுத்தரக்கூடிய ஒப்பந்தத்தை முடித்ததில் எங்கள் அணியின் திறமை, உழைப்பு, பிடிவாதம் ஆகியவற்றைப் பாராட்டினார். யாரையும் தனியாகக் குறிப்பிட்டு அவர் பேசவில்லை. அணித் தலைவர் என்ற முறையில் என் பெயரைச் சொல்லவில்லை. 'மார்க்கெட்டிங் டீம்' என்றுதான் திரும்பத் திரும்பச் சொன்னார். இந்த அணியின் மூளையாக விளங்கிய சிவபிரசாத்தைக் குறிப்பிட்டுப் பாராட்டினார். 'விஸ்டம்', 'விஷனரி' ஆகிய சொற்கள் தாராளமாகப் புழங்கின.

"இப்போது நாம் பெற்றிருக்கும் வெற்றி மகத்தானது. அந்த வெற்றி நமது வழக்கமாக மாற வேண்டுமென்றால் நம்முடைய அணுகுமுறையில் மாற்றம் வர வேண்டும். அந்த மாற்றத்தைப் பற்றி நான் சொல்வதைவிட ஞானியும் சிந்தனையாளருமான திரு. சிவபிரசாத் சொல்வதே பொருத்தமானது. எனவே, இந்த இடத்தில் என் பேச்சை நிறுத்திக்கொண்டு அவருக்கு வழிவிடுகிறேன்" என்று முடித்தார் லாரன்ஸ்.

அரங்கம் கைத்தட்டல்களால் அதிர்ந்தது. அவருடைய பேச்சைவிடவும் அவர் சுருக்கமாகப் பேசியதற்காகத்தான் எல்லோரும் பாராட்டுகிறார்கள் என்று எனக்குத் தோன்றியது.

நானும் உற்சாகமாகக் கைதட்டியபடி சிவா சார் எழுந்து மைக்கிற்கு முன்பு வருவதைப் பார்த்துக் கொண்டிருந்தேன். இடையில் அவ்வப்போது திருமணமாகாத அந்தச் சுமார் அழகிகளையும் நோட்டம் விட்டுக்கொண்டிருந்தேன். ஒப்பனையும் உடை அலங்காரமும் அவர்களுடைய அழகைப் பத்து சதவீதமாவது கூட்டியிருந்தன. ஆனால், மாலதியின் லிப்ஸ்டிக்கின் அடர்த்தியைத்தான் சகித்துக்கொள்ள முடியவில்லை. அவளுடன் நெருக்கமாகப் பழகும் வாய்ப்பு ஏற்படும்போது கட்டாயம் இதைப் பற்றிப் பேச வேண்டும் என்று நினைத்துக்கொண்டேன். சைந்தவி முக ஒப்பனையைக் காட்டிலும் ஆடை விஷயத்தில்தான் அதிக கவனம் செலுத்தியிருந்தாள். தன்னுடைய வலிமை என்னவென்று அவளுக்குத் தெரிந்திருந்தது. இவளுடன் நட்பு இறுகினால் இதற்காகப் பாராட்ட வேண்டும் என்று நினைத்துக்கொண்டேன். அடர் உதட்டுச் சாய மாலதியா கட்டழகில் மயக்கும் சைந்தவியா, யாருக்கு அதிர்ஷ்டம் அடிக்கிறது என்று பார்ப்போம் என்று நினைத்தபோது அதிலுள்ள அபத்த நகைச்சுவையை எண்ணி எனக்குள் சிரிப்பு பொங்கியது. உதட்டுச் சுழிப்பில் அந்தச் சிரிப்புக்கு அணை போட்டபடி சிவா சாரின் பேச்சைக் கவனிக்கத் தொடங்கினேன்.

"இது வெற்றியைக் கொண்டாடும் தருணம். வெற்றிகள் கொண்டாடப்பட வேண்டியவை என்பதில் ஐயமில்லை. நியாயமான பெருமிதங்களும் மகிழ்ச்சியும் கொண்டாட்டமும் நம்முடைய உயர் நிலைக்கு வலு சேர்ப்பவை. ஆனால், இந்தக் கொண்டாட்டங்களுக்குக் காரணமான இந்த வெற்றி நமது இலக்கல்ல என்பதை நினைவில் கொள்ள வேண்டும். இது நமது பாதையில் ஒரு மைல்கல். அதை நல்ல விதமாகக் கடந்திருக்கிறோம். அதில் மகிழ்ச்சிகொள்கிறோம். இதுபோல இன்னும் பல மைல் கற்கள் நம் பாதையில் உள்ளன. நமது நிறுவனம் மக்களின் அன்றாட வாழ்வுடன் தொடர்புகொண்ட சேவையை வழங்குகிறது. அதாவது, மக்கள் அதிகச் செலவில்லாமல் தங்கள் அன்றாட வாழ்வை மேம்படுத்திக்கொள்ள உதவுவது நம் குறிக்கோள். மேம்படுத்துதல் என வரும்போது தரத்தில் சமரசத்திற்கு இடமில்லை.

"தரமான சேவையைச் சிக்கனமான விலையில் வழங்குவது; இந்தச் செயல்பாட்டை வாழ்வின் பல்வேறு துறைகளுக்கும் விரித்துக்கொண்டே போவது; இதுதான் நமது இலக்கு. நமது நிறுவனம் தொடங்கி ஐந்து ஆண்டுகளில் இதுதான் முதல் கொண்டாட்டம். இத்தகைய தருணம் வருவதற்கு நாம் ஏன் ஐந்தாண்டுகள் காத்திருக்க வேண்டி யிருந்தது என்னும் கேள்வியை நாம் எழுப்பிக்கொள்ள வேண்டும். இந்த வெற்றி எப்படிக் கிடைத்தது என்பதையும் இதற்கு முந்தைய அரை வெற்றிகளையும் முழுத் தோல்விகளையும் ஆழமாக அலசினால் நம்மால் மாதத்திற்கு ஒருமுறை கொண்டாடுவதற்கான காரணத்தை உருவாக்க முடியும்.

"நிறுவனத்தில் திறமையற்றவர் என யாரும் இல்லை. போதிய உழைப்பைச் செலுத்தாதவரும் யாரும் இல்லை. திறமை, உழைப்பு ஆகியவற்றுடன் சரியான அணுகுமுறையும் சேரும்போது வேண்டிய மாற்றம் உருவாகிறது. அந்த அணுகுமுறை என்ன என்பதை விவரிக்க இது பொருத்தமான இடமல்ல. அதற்காகத் தனியே கூடிப் பேசுவோம். அனுபவங்களையும் சிந்தனைகளையும் பகிர்ந்துகொள்வோம். சரியான அணுகுமுறை என்ன என்பதைப் புரிந்துகொள்வோம். அது ஒவ்வொரு துறைக்கும் ஒவ்வொரு முயற்சிக்கும் ஏற்ப மாறுபடும் என்பதையும் புரிந்துகொள்வோம். அது தனிப்பயிற்சி. இது கொண்டாடுவதற்கான நேரம். முக்கியமான இந்த மைல் கல்லுக்கு அருகில் சற்றே அமர்ந்து இளைப்பாறிவிட்டுப் புதிய வேகத்துடன் மீண்டும் செயல்படத் தொடங்குவோம். பேச வாய்ப்பளித்தமைக்கு நன்றி."

கைத்தட்டல் அடங்க இரண்டு நிமிடங்கள் ஆயின. நானும் கை தட்டினேன். மற்றவர்கள் அனைவரும் சட்டென்று தங்கள் கைத்தட்டலை நிறுத்தியிருந்தால் என் கைகளின் இணைப்பில் ஓசை வரவில்லை என்பது அம்பலமாகியிருக்கும். மனதின் வெறுமையைக் கைகள் எதிரொலித்தன. சிவா சார் தத்துவவாதி. அவர் இப்படித்தான் பேசுவார் என்பது தெரியும். ஆனால், ஒருமுறைகூட,

ஒரே ஒருமுறைகூட எங்கள் அணியைப் பற்றி, என் தலைமையைப் பற்றிக் குறிப்பிடக் கூடாதா? எத்தனை முறை இந்தத் திட்டம் பற்றி அவரிடம் விவாதித்திருக்கிறேன். அவர் தந்த யோசனைகளின் மீது என்னுடைய எண்ணங்களைச் சொன்னபோது எத்தனை முறை பாராட்டியிருக்கிறார்.

"நீங்கள் மாறினால் உங்கள் அணி மாறும். உங்கள் அணுகுமுறையும் செயல்பாடும்தான் உங்கள் அணிக்குப் பரவும். உங்கள் உண்மையான திறனை நீங்கள் உணரும்போது நீங்கள் உங்களுடைய மேம்பட்ட வடிவமாக ஆகியிருப்பீர்கள். அந்த வடிவம் தானாகவே மற்றவர்களுக்கு உத்வேகமூட்டும்" என்றார்.

அடுத்தடுத்த சந்திப்புகளில் என்னிடம் கணிசமான வளர்ச்சி தெரிகிறது என்றார். இதைப் பற்றியெல்லாம் சொல்ல அவருக்கு ஒரு வார்த்தைகூடக் கிடைக்கவில்லையா? தத்துவ ஞானி என்றால் சக மனிதனின் வளர்ச்சியை உணரத் தெரியாத மரக்கட்டையா? கைத்தட்டல் ஓசை அடங்கும்போது கவனமாக என் கைகளையும் தாழ்த்திக்கொண்டேன்.

அடுத்து எம்.டி.யின் பேச்சு. இவர் சிவா சாரைப் போலத் தத்துவ ஞானி அல்லர். நடைமுறைவாதி. அணுகுமுறையில் மாற்றம், உளநிலையில் சலனம் என்றெல்லாம் பேசமாட்டார். வெற்றியைக் கொண்டுவந்த எங்களைப் பாராட்டுவார். கூட்டம் தொடங்குவதற்கு முன்பு என்னைக் கடந்து சென்றவர் நின்று திரும்பி எனக்குக் கைகொடுத்துத் தோளில் தட்டிக்கொடுத்துவிட்டுப் போனார். அந்த ஷொட்டு அவர் பேச்சிலும் கிடைக்காதா என்ன.

கிடைத்தது. ஒன்றல்ல; பல ஷொட்டுக்கள். அத்தனையும் சிவ பிரசாத் என்னும் தீர்க்கதரிசிக்கு. சிவபிரசாத் என்றும் நவீன குருநாதருக்கு, சிவபிரசாத் என்னும் லட்சியப் பார்வை கொண்டவருக்கு, சிவபிரசாத் என்னும் மனிதர்களின் மனங்களையும் குணங்களையும் மாற்றும் ரசவாதிக்கு. இதற்கெல்லாம் பொறுக்கி எடுத்த ஆங்கிலச் சொற்களை அவர் பயன்படுத்தினார். Foresight, Visionary, Modern Guru, Catelist, Game Changer என்றெல்லாம் அடுக்கினார். மொத்த அலுவலகமும் அர்ஜுனன் என்னும் அவரைக் கிருஷ்ணன் என்றும் சொல்லித் தன் பேச்சை முடித்தார்.

எம்.டி. பேச்சு அல்லவா. மூன்று நிமிடங்கள் கைத்தட்டல்கள் அதிர்ந்தன. கை வலிக்கப் போகிறது தோழர்களே. பிறகு எப்படிச் சாப்பிடுவீர்கள்? எப்படிக் கோப்பையை ஏந்துவீர்கள்? எப்படித் தளுக்காகக் கட்டிப் பிடித்துக்கொள்வீர்கள்?

எங்கள் அணியினர் ஐவருக்கும் ரொக்கப் பரிசும் பட்டயமும் கொடுத்தார்கள். அடர் சிவப்பு நிறத்தில் புடவையும் கையில்லாத ரவிக்கையும் அதே நிறத்தில் அடர்த்தியான உதட்டுச் சாயமும் அணிந்திருந்த எம்.டி.யின் மனைவி எங்களுக்கு விருதுகளை வழங்கினார். ஒளிப்பதிவுக் கருவிகள் பளிச்சிட்டன. அந்த அம்மையாரின் விரல் நகங்களிலும் செந்நிறப் பூச்சு இருந்தது. விருதைப் பெற்றுக்கொண்டு கை குலுக்குவார் என்று எதிர்பார்த்தேன். வயதானாலும் முன்னாள் அழகி அல்லவா. அவர் கையை ஸ்பரிசிக்கும் வாய்ப்பு கிடைக்கும் என்று நினைத்தேன். ஆனால், அவர் கையெடுத்துக் கும்பிட்டு இந்தியப் பண்பாட்டைக் காப்பாற்றினார். 'தாமரை ஒருநாள் மலர்ந்தே தீரும்.'

லாரன்ஸ் தங்கராஜுக்கும் சிவா சாருக்கும் சற்றே பெரிய பட்டயங்கள். அவர்களுக்கு விருதளிக்கும்போது எம்.டி.யும் இணைந்துகொண்டார். இருவரிடமும் ஒரு நிமிடம் குசுகுசுவென்று பேசினார். ஒளிப்பதிவுக் கருவிகளுக்குக் கொண்டாட்டம். அடுத்த ஆண்டு நிறுவன இதழின் அட்டையில் இந்தக் காட்சி வந்தாலும் வியப்பதற்கில்லை. அதில் ஒரு பக்கத்தில் என் படமும் இடம்பெறும். தலை முடியைச் சீவும்போது உதிரும் மயிர்க் கற்றைகளைப் பத்திரமாக எடுத்து வைக்க வேண்டும். அந்தப் பக்கத்தில் ஒட்டிவைத்து அழகு பார்க்கலாம்.

அதற்குள் சிலர் மதுபான மூலைக்குச் செல்லத் தொடங்கியிருந்தார்கள். நானும் அவர்களுடன் சேர்ந்துகொண்டேன். இருப்பதிலேயே அதிக காட்டமான மதுவகையை முழுக் கோப்பையிலும் ஊற்றிக்கொண்டு கூடவே காராசேவையும் அள்ளிக்கொண்டு ஒரு மூலையில் போய் உட்கார்ந்தேன். டையை உருவிக் கால்சட்டைப் பைக்குள் சுருட்டிவைத்தேன். ஒரு மிடறு உள்ளே போனதும்தான் படபடப்பு அடங்கியது. தூரத்தில் எம்.டி. கோப்பையை உயர்த்தியபடி மது விருந்துக்கான வாழ்த்துச் செய்தி என்று எதையோ சொல்லிக்கொண்டிருந்தார். ஒளிப்பதிவாள அடிமைகள் நின்றும் மண்டியிட்டும் படம் எடுத்துக்கொண்டிருந்தார்கள். எம்.டி., அவர் மனைவி, லாரன்ஸ், சிவா சார் ஆகிய நால்வரும் கோப்பையை உயர்த்திக் காட்டிவிட்டுக் கிளம்பிவிட்டார்கள். நான் பொறுமையாக நடந்து சென்று இன்னொரு கோப்பையை நிரப்பிக்கொண்டு ஒரு தட்டில் சிக்கன் உருண்டைகளை எடுத்துக்கொண்டு வந்து உட்கார்ந்தேன். உதட்டுச் சாய அழகியையும் உடையலங்காரியையும் காணவில்லை.

எவ்வளவு குடித்தேன், என்ன சாப்பிட்டேன், யாரிடம் என்ன உளறினேன் என்பதெல்லாம் நினைவில்லை. காலை பதினோரு மணிக்கு சதீஷ் போனில் அழைத்து, "ஏண்டா கூமுட்ட, குடிக்கறதுக்கு உனக்கு வேற எடமோ நேரமோ கெடைக்கலயாடா மடக்கூ" என்று பேசத் தொடங்கினான். முற்றிலும் தூக்கம் கலையாத நிலையில், "என்ன விஷயம்னு



சொல்றா மயிறு" என்றே. "டேய் பன்னாட, போன்லயே எல்லா விவரம் மயிறும் சொல்ல முடியாது. குளிச்சிட்டு ரெடியாகு. ஒரு மணிக்கு வரேன்" என்று சொல்லிவிட்டு அழைப்பைத் துண்டித்தான்.

ஆந்திரா மெஸ்ஸுக்குப் போய் உட்கார்ந்து சாப்பிட ஆரம்பித்த பிறகு சதீஷ் விவரம் சொல்ல ஆரம்பித்தான்.

நான் கலப்படமற்ற காட்டமான சரக்கில் மூன்று கோப்பைகளை உள்ளே தள்ளிவிட்டு மேஜையிலிருந்து எழுந்தேனாம். பார்க்கிறவர்களிடமெல்லாம் குட்மார்னிங் மேடம், குட் ஈவினிங் சார், விஷனரின்னா என்ன அர்த்தம் என்று கேட்டேனாம். ஃபோர்சைட், ஆட்டிட்யூட், ஸ்ட்ராட்டஜி, மோல்டிங் த மைண்ட் என்றெல்லாம் சொல்லிச் சொல்லி அர்த்தம் கேட்டேனாம். சிரித்தபடி தவிர்க்கப் பார்த்தவர்களை, பதில் சொல்லிட்டு போடா பாடு என்று சொன்னேனாம். எல்லோருமே விலகிப் போனதும் நடுக்கூடத்தில் நின்றபடி, "ங்கோத்தா உழைப்புக்கு மதிப்பில்லடா இங்க. விஷனாம் மோல்டிங்காம், மயிறு. த்தூ..." என்று பேச ஆரம்பித்ததும் சதீஷும் இன்னும் சிலரும் வலுக்கட்டயமாக என்னை இழுத்துச் சென்று ஆட்டோவில் திணித்து ஐஸ் ஹவுஸுக்கு அருகிலிருக்கும் என்னுடைய மேன்ஷன் அறையில் கொண்டுவந்து போட்டார்களாம். கோபி என் பாக்கெட்டிலிருந்து சாவியை எடுத்து, வண்டியைக் கொண்டுவந்து மேன்ஷனில் விட்டிருக்கிறான்.

மூன்றாவது முறையாகச் சோறு வாங்கிக்கொண்டு அதில் சாம்பாரை ஊற்றிப் பிசைய ஆரம்பித்தேன். என்னையே பார்த்துக்கொண்டிருந்த சதீஷ், "உனக்குக் கொஞ்சம்கூட அறிவே இல்லையாடா?" என்றான். பதில் பேசாமல் சாப்பிட்டுக் கொண்டிருந்தேன். மீண்டும் சோறு வாங்கி ரசம் ஊற்றிக்கொண்டேன். ஒரு ஆம்லெட் போடச் சொன்னேன். ரசம் சாதம் சாப்பிட்டதும் தயிருக்குச் சோறு போட வந்த பையனிடம் வேண்டாம் என்று சொல்லிவிட்டுத் தயிரில் சர்க்கரை கலந்து பொறுமையாகச் சாப்பிட்டேன்.

சதீஷ் கொதித்துக் கொண்டிருப்பது தெரிந்தது. ஆனால், அவன் கோபித்துக்கொண்டு போய்விட மாட்டான். என்னை நன்றாக அறிந்தவன். பல நெருக்கடிகளில் உதவியிருக்கிறான். சினிமா போவதாக இருந்தால் என்னைத்தான் கூட்டிக்கொண்டு போவான். நான் காட்சிக்குக் காட்சி படத்தைக் கழுவி ஊற்றுவதை ரசிப்பான். திரையரங்குக்குப் போனாலும் உணவகம் போனாலும் அவன்தான் செலவழிப்பான். நிறுவனத்தில் கொள்முதல் துறையில் மூத்த அதிகாரி அவன். எப்படியோ என்மீது அன்பும் அனுதாபமும் அவனுக்கு ஏற்பட்டுவிட்டது. அவன் மனைவிக்கு என்னை அவ்வளவாகப் பிடிக்காது என்றாலும் அவ்வப்போது வீட்டுக்குக் கூட்டிச்சென்று சாப்பிடச் சொல்லுவான். அவன் மனைவி அபாரமாகச் சமைப்பாள். அநியாயத்துக்கு அழகாக இருப்பாள். நண்பனின் மனைவி என்ற கவனத்துடன் பேசினாலும் ஒண்டிக்கட்டை ஆணின் கண்களுக்குக் கடிவாளம் போட்டுவிட முடியுமா? எதிரில் இருப்பவரின் கண்கள் எங்கே போகின்றன என்பதை அறியாத அழகிகளும் உலகத்தில் உண்டா? அதனால்தான் அவளுக்கு என்னைப் பிடிக்கவில்லை. ஆனால், சதீஷ் கொஞ்சம் அப்பாவி. ரொம்ப நல்லவன். நான் நன்றாகச் சாப்பிடுகிறேனா என்றுதான் கவனிப்பான்.

சாப்பிட்டு முடித்துவிட்டுப் பக்கத்தில் இருந்த பூங்காவுக்குச் சென்று உட்கார்ந்தோம். நிறைவான உணவு தரும் மனநிறைவைச் சிறிது நேரம் கண்களை மூடியபடி மௌனமாக அனுபவித்தேன். சதிஷும் உடன் இருப்பது சில நிமிடங்களுக்குப் பிறகே உறைத்தது. கண்களைத் திறக்காதே என்று சொல்லும் தூக்கத்தை விரட்டிவிட்டுக் கண்களைத் திறந்தேன்.

"இன்னிக்கு லீவு போட்டுருக்கியா?"

"நீயும் ஆஃபீகஸ் போகல. நானும் ஆஃபீஸ் போகல. ஆனா நீ லீவான்னு உன்னைப் பாத்து நான் கேக்கல பத்தியா?"

"நல்லா பேசறடா மாப்ள."

"பாராட்டு மசுருல்லாம் இருக்கட்டும். என்னடா பண்ண போற?"

"வேற வேல பாக்க வேண்டியதுதான்."

"நேத்துதான் பெஸ்ட் பர்ஃபாமன்ஸுக்காக விருது. இன்னிக்கு ரிசிக்னேஷன். பெரிய கொடுமடா உன்னோட."

"அந்த விருதப் பத்தி பேசாதடா. அசிங்க அசிங்கமா வாய்ல வருது."

"அதுல என்னடா பிரச்சன? நீ குடிச்சிட்டு ஆட்டம் போட்டதுதானடா பிரச்சனை?"

"ஏங் குடிச்சேன்னு தெரியுமா?"

"நீதான் பாட்டில கண்டா நாக்க தொங்க போட்டுகிட்டு நாய் மாதிரி ஓடுவியே."

"ஆமாண்டா. ஓடுவேன். ஆனா ஆஃபீஸ் பார்ட்டில எப்டி நடத்துக்கணும்னு எனக்குத் தெரியாதா? இன்ஃபாக்ட் நேத்து குடிக்கவே கூடாதுன்னு இருந்தண்டா. ரொம்ப சந்தோஷமா இருந்தண்டா. ரொம்ப உற்சாகமா..."

"டேய்... டேய்..." சதீஷ் என் தோள்களை அணைத்து உலுக்கினான். "என்னடா திடீர்னு அழுற?" என்றான். சற்றே என் முகத்தருகே நெருங்கி முகர்ந்து பார்த்தான்.

"தண்ணியெல்லாம் அடிக்கலடா..." என்றேன் கண்களைத் துடைத்தபடி.

"நீ இப்படி அழுது நான் பாத்ததேயல்லயேடா..." சதீஷின் குரல் இடறியது. சிறிது நேரம் மௌனமாக இருந்து என் உணர்வுகளின் சக்தியை மீட்டுக்கொண்டேன். கழிவறைக்குப் பக்கத்தில் இருந்த குழாயில் முகத்தைக் கழுவிக்கொண்டு வந்தேன். நேற்று இருந்த மனநிலையையும் என்னுடைய ஏமாற்றத்தையும் சொன்னேன்.

பொறுமையாகக் கேட்டுக்கொண்டிருந்த சதீஷ், "இதெல்லாம் ஒரு மேட்டராடா? கார்ப்பரேட் ஸ்ட்ரக்சர்ல இதெல்லாம் சகஜம்டா. கீழ இருக்கறவனுக்கு இன்சன்ட்டிவ் குடுப்பாங்க, இன்க்ரிமென்ட் குடுப்பாங்க. சில சமயம் அவார்டுகூட குடுப்பாங்க. ஆனா கிரெடிட் யாருக்குப் போகணும்ன்றதுல தெளிவா இருப்பாங்க. இதுகூடத் தெரியாதாடா ஒனக்கு?" என்றான்.

"அது இல்லடா சதீஷ். நா இந்த ப்ராஜக்டுக்காகக் கடுமையா ஒழச்சிருக்கேண்டா. நாயா அலைஞ் சேண்டா. டீம் மெம்பர்ஸ்கிட்டல்லாம் ராத்திரி பத்து பதினோரு மணிக்கெல்லாம் கான் கால் போட்டு பேசுவண்டா. அவனுங்களுக்கு ஃபீல்டுல என்ன ப்ராப்ளம்னு பாத்து பாத்து சரி பண்ணினேண்டா. பல நாள் பசங்களுக்கு லஞ்ச் வாங்கி குடுத்துருக்கேன். சேல்ஸ் மேனேஜர கண்டாலே பசங்க நடுங்குவாங்க. அவருகிட்ட நான்தான் பேசுவேன். இந்த ப்ராஜக்டுக்காக அவ்ளோ ஒழச்சேண்டா..."

"அதுக்குதானடா கேஷ் ப்ரைஸும் அவர்டும் கொடுத்தாங்க. வாங்கினு மூடிட்டு போக வேண்டியத்தானடா. என்ன மயித்துக்குடா பாராட்டுல்லாம் எதிர்பாக்கற?"

"இந்த பத்தாயிரம் ரூபா எனக்குப் பெரிய அமவுண்டுதான். ஆனா ரெகக்னிஷன்றது அதவிட பெரிசுடா. லாரன்ஸும் எம்.டி.யும் சிவா சாரை எப்படிப் பாராட்னாங்க பாத்தல்ல. புகழெல்லாம் விரும்பாதவர்னு நெனைக்கறோமே அந்த சிவா சார் மூஞ்சிய அப்ப பாத்தியாடா? யார்ரா சொன்னது பாராட்டு முக்கியமில்லன்னு? முக்கியண்டா. ரொம்ப முக்கியண்டா. அதோட கம்பேர் பண்ணா இந்த கேஷ் ப்ரைஸ் ஜஸ்ட் நத்திங்..." என்று சொல்லிவிட்டு சதீஷ் பாக்கெட்டிலிருந்து சிகரெட்டையும் லைட்டரையும் எடுத்துப் பற்றவைத்தேன்.

"ஒண்ணே ஒண்ணுதான் இருக்குடா" என்று சொல்லிவிட்டு சிகரெட்டை வாங்கி இரண்டு இழுப்பு இழுத்துவிட்டுத் தந்தான். "போற வழில வாங்கிக்கலாண்டா மயிறு" என்று புகையை ஆழமாக உள்ளிழுத்து மெதுவாக வெளியே விட்டேன். சிகரெட்டை அவன் கையில் கொடுத்தேன்.

"நான் இந்த ப்ராஜக்ட்ல எந்த அளவுக்கு ஒடம்பாலயும் மனசாலயும் ஈடுபட்டேன்னு சேல்ஸ் மேனேஜருக்குக்கூட தெரியாதுடா. டார்கெட் குடுத்து ஸ்ட்ராட்டஜிய டிஸ்கஸ் பண்ணி ஃபைனலைஸ் பண்ணினதோட அவனோட வேல முடிஞ்சிடிச்சி. நடுவுல ஏதாவது சந்தேகம் கேட்டாலோ டிஸ்கஸ் பண்ணணும்னு சொன்னைலோ, 'ஸ்கூல் பசங்க ப்ராஜக்ட் பண்றா மாதிரி பண்ணாதீங்க வாசு. பீ ரெஸ்பான்சிபிள். டேக் ரெஸ்பான்சிபிலிடி. ட்ரபுள் வந்தா டீம்ல பேசி சால்வ் பண்ணுங்க. பசங்க சரியில்ன்னா ஹெச்.ஆர். கிட்ட பேசுங்க.

ஆட்டிட்யூட், அப்ரோச் இந்த மாதிரி பிரச்சனயா இருந்தா இருக்கவே இருக்காரு நம்ம கம்பெனி சாமியார் சிவா. அவர்கிட்ட போங்க. ஐ வாண்ட் டெலிவரி. எப்படிப் பண்ணுவீங்களோ தெரியாது. முடியாதுன்னா இப்பவே சொல்லிடுங்க, நான் டைரக்டா டீல் பண்ணிக்கறேன்', அப்டீன்னு சொல்லிட்டான் அந்த நாறப்பய. நா சிவா சாரோட டிஸ்கஸ் பண்ணி டிஸ்கஸ் பண்ணிதான் ப்ரோக்ரஸ் வந்தது. அவர் செஞ்ச உதவி பெரிசு. ஆனா அதுல என் பங்கு முக்கியமானதுடா. அது அவருக்கும் தெரியும். இந்த ப்ராஜக்ட்ல நானே எந்த அளவு மாறி யிருக்கேன்னு அவருக்குத் தெரியும். அவர் என்னோட வெல்விஷர். மென்ட்டார். அவருகூட என்னப் பத்தி ஒரு வார்த்த சொல்லலடா. மத்தவங்க அவர பாராட்டும்போது இதுக்கெல்லாம் வாசுதேவனும் காரணம்னு அவர் ஒருவார்த்தைசொல்லியிருக்கலாம். அத நெனச்சாதான்டா தாங்க முடியல."

சதீஷின் கையில் மிச்சமிருந்த சிகரெட் துண்டை வாங்கி அதைப் புகைத்து முடித்தேன். கொஞ்சநேரம் கழித்து சதீஷ் கேட்டான், "இப்ப என்ன பண்ண போற?"

"நீ சொல்றத பாத்தா நேத்து பெரிய சீன் நடத்துருக்கு. இன்னேரம் மேட்டர் எம்.டி. வரைக்கும் போயிருக்கும். இனிமே நா இங்க இருக்கறது மரியாத இல்ல."

"பார்ட்டில சீனாகறதெல்லாம் பெரிய விஷயமாடா? ஹெச்.ஆர். கிட்ட அபாலஜி லெட்டர் குடுத்துட்டு பேசாம டூட்டிக்கு வாடா. இந்த சம்பளத்துல உனக்கு உடனே எங்கயும் வேலை கிடைக்காது. இது நல்ல கம்பெனிடா. இப்பல்லாம் ரெக்ரூட் பண்ணும்போது ப்ரீவியஸ் கம்பெனி ஹெச். ஆர்.கிட்ட பேசிட்டுதாண்டா ரெக்குப் பண்றான்."

"தெரியுண்டா. ரிசைன் பண்ணிட்டு சைலன்டா ஒரு மாசம் ஊருக்கு போயிடுவேன். திரும்பி வந்து வேலை தேடலாம். லாரன்ஸ் கிட்ட ரிக்வெஸ்ட் பண்ணி நல்ல ரிப்போர்ட் குடுக்க சொல்லலாம். மார்க்கெட்டிங்தானடா, வேல கிடைக்காமலா போயிடும்?"

"கெடைக்குண்டா. ஆனா, நல்ல கம்பெனில அவ்வளோ ஈஸியா கெடைக்காது. அவசரப்பட்டு முடிவு பண்ணாதடா. கைல இருக்கற காசு செலவாச்சுனா குண்டி காய வேண்டியதுதான். நா வேணா லாரன்ஸ் கிட்ட பேசறேன்."

"அதெல்லாம் வேணாண்டா."

"இல்லார்டி சிவா சார் கிட்டயே பேசவா?"

"வேணவே வேணாம். அவருகிட்ட என் பேச்சையே எடுக்காத."

ஆனால், சதீஷ் என் பேச்சைக் கேட்கவில்லை. எனக்குத் தெரியாமல் சிவா சாரைப் போய்ப் பார்த்திருக்கிறான். அவர் வழக்கம்போலப் பொறுமையாக எல்லாவற்றையும் கேட்டுவிட்டுத் தன்னுடைய கருத்தைச் சொல்லியிருக்கிறார்.

"வாசு நல்ல ஒர்க்கர். நைஸ் பர்சன். கத்துக்கறதுல ஆர்வமுள்ள மனுஷன். நெறைய டேலன்ட்ஸ் இருக்கு. யுனீக்கான ஐடியாஸ் இருக்கு. யாராவது ப்ராப்பா கெய்ட் பண்ணினா நல்லா பர்ஃபார்ம் பண்ணுவார். அவரா எதுவும் பண்ணமாட்டார். ஏன்னா அவருக்கு மோட்டிவேஷன் கிடையாது. வாழ்க்கையில் ஆழமான பிடிப்போ லட்சியங்களோ கிடையாது. ஆசைகள் இருக்கு. ஆனால், பொறுப்புகளை ஏற்காமல் ஆசைகளை நிறைவேத்திக்க முடியாது. எதையுமே சாதிக்காமல் எதையும் எதிர்பார்க்க முடியாது. எதைச் செய்யறதுக்கும் சொல்றதுக்கும் நேரம், சூழல் எல்லாம் முக்கியம். வாசு இதுல ரொம்ப வீக். அவருக்குக் கூர்மையான மூளை இருக்கு. எல்லாரைப் பத்தியும் எல்லாத்தப் பத்தியும் விமர்சனம் இருக்கு. ஆனா விமர்சனம் பண்றதுக்கு ஒரு முறை இருக்கு. இடம், நேரம் இருகக்கு. வாசுதேவனுக்கு இதெல்லாம் தெரியாது. சொன்னாலும் புரிஞ்சிக்க மாட்டார். பொறுப்பு இல்லை. லட்சியம் இல்லை. பிடிப்பு இல்லை. இங்கிதம் இல்லை. மூளை இருக்கு, கூர்மையான நாக்கு இருக்கு. இப்படி இருந்தா அனர்த்தம்தான் விளையும். இந்த ப்ராஜக்ட்ல அவரோட பங்கு முக்கியமானதுதான். ஆனா அவர் கிட்ட இதை முழுசா குடுத்திருந்தா பெரிய டிசாஸ்டர் ஆகியிருக்கும். ஏன்னா அவருக்கு மத்தவங்களைக் கையாளும் பக்குவம் இல்லை. முழுக்க முழுக்க நானும் லாரன்ஸும் சேல்ஸ் மேனேஜரும் பேக்-அப் பண்ணினதுனாலதான் இது நடந்தது. மேனேஜ் மென்ட்டுக்கு இது நல்லா தெரியும். வாசு ஒரு கருவி மட்டும்தான். அதைப் பயன்படுத்தினது நாங்க. இதெல்லாம் வாசுவுக்குப் புரியாது. புரியவைக்கவும் முடியாது. ஆனா என்னால ஒண்ணும் செய்ய முடியாது. ஏன்னா என்னால பொய் சொல்ல முடியாது. இப்ப அவரைப் பாத்து பேசறதும் வேஸ்ட். கொஞ்ச நாள் கழிச்சி பாத்தா அவரோட மனக் கொதிப்பு அடங்கியிருக்கும். காது கொஞ்சம் திறந்திருக்கும். வேலை விஷயமா வேண்ணா நான் எம்.டி. கிட்ட பேசறேன். பார்ட்டில யாராவது மிஸ்பிஹேவ் பண்றது ஒண்ணும் புதுசு கிடையாது. அபாலஜி வாங்கித் தர்றது கஷ்டமில்லை."

நான் சதீஷை நேருக்கு நேராகப் பார்த்தேன். "பரவாயில்லயே. கிட்டத்தட்ட அவர் பேசறா மாதிரியே கோவையா சொல்லிட்டியே" என்றேன்.

"இந்த காம்ப்ளிமென்ட் மயிறுல்லாம் இருக்கட்டும். மொதல்ல வேலைக்கு சேர்ற வழியப் பாருடா வெண்ண."

“ரொம்பதேங்ஸ்டா மாப்ள. நேத்து வரைக்கும்கூட அபாலஜி கேட்டுத் திரும்ப வந்துரலாமான்னு யோசிச்சேன். ஆனா சார் சொல்லத கேட்டப்பறம் இனி இந்தக் கம்பெனி வேணாம்னு கண்டிப்பா தோணுது. அவர் என்னப் பத்தி சொன்னது பெரும்பாலும் சரிதாண்டா. ஆனால், நான் ஒண்ணும் முட்டாள் இல்ல. என்னோட மதிப்பை நிரூபிச்சிட்டு வந்து அவர பாக்கறண்டா.”

சதீஷ் எதுவும் பேசாமல் திகைத்துப்போய் நின்றான். அன்றிரவு முன்னறிவிப்பில்லாமல் அவன் வீட்டுக்குப் போனேன். சதீஷ் ஆச்சரியமடைந்தான். “என்னடா திடீர்னு?” என்றான். “ஊருக்கு போறண்டா. உஙக வீட்டு தோசைய சாப்டுட்டு போலாம்னு வந்தேன்” என்றேன். வேணி எட்டிப் பார்த்துச் சிரித்தாள். கொள்ளை அழகு. “கொஞ்சம் வெயிட் பண்ணுங்க. சட்னி அரைக்கறேன்” என்றாள். “உங்க மொளகாப் பொடியே போதும்” என்றேன். ஐந்து தோசைகளைச் சாப்பிட்டுக் காபியும் குடித்துவிட்டுக் கிளம்பினேன். “கோயம்பேடு பஸ் ஸ்டாண்ட்ல கொண்டு விடுடா” என்றேன். சதீஷ் மறு பேச்சுப் பேசாமல் கிளம்பினான். வேணி சிரித்தபடி விடைகொடுத்தாள். போய்த்தொலை என்றுகூட அவள் நினைத்திருக்கலாம். அவள் சிரிப்பைப் பார்த்ததும் எனக்கு மனசு படபடவென்று அடித்துக்கொண்டது.

அடுத்து என்ன செய்யப்போகிறாய் என்று போகும் வழியெல்லாம் சதீஷ் கேட்டுக்கொண்டிருந்தான். இந்த ஒரு வேலையில்தான் இரண்டு ஆண்டுகள் தாக்குப் பிடித்திருக்கிறேன். மற்ற எல்லா இடங்களிலும் மூன்று முதல் ஆறு மாதம் வரைதான் நீடிக்கும். ஏதோ ஒரு பிரச்சினை வந்து வேலையை விட வேண்டிவரும். பாதி இடங்களில் குடிப் பிரச்சினை. சில இடங்களில் போதிய அளவு செயல்படாமை என்று சொல்லி அனுப்பிவிடுவார்கள். வேறு சில இடங்கள் உருப்படாது என்று நானே விட்டுவிட்டு வந்துவிடுவேன். அடுத்து என்ன என்ற கேள்விக்கெல்லாம் தெளிவான பதில் எதுவும் இல்லை. பட்டப் படிப்பைக்கூட முழுமையாக முடிக்காதவனுக்குச் சந்தைப்படுத்துதல் தவிர வேறு என்ன வேலை கிடைக்கும்? அக்கவுண்ட்ஸ், சாஃப்ட்வேர் என்று வேறு திறமைகளையும் வளர்த்துக்கொள்ளவில்லை. செலவு செய்து படிக்கவைக்கவும் ஆள் இல்லை. அப்பா சின்ன வயதிலேயே இறந்துவிட்டார். அம்மா வீட்டு வேலை செய்து படிக்கவைத்தார். நான் கல்லூரிக்குப் போவதற்குள் உடம்புக்கு முடியாமல் படுத்துவிட்டார். இப்போது அண்ணன் வீட்டில் நடைபிணமாக இருக்கிறார். அண்ணன் நிலையும் சொல்லிக்கொள்கிறாற்போல இல்லை. தங்கையைக் கல்யாணம் பண்ணிக் கொடுத்த இடமும் சரி யில்லை. ஒரே குடும்பத்தை இப்படிக் குறிவைத்துத் தாக்குவதென்று கடவுள் முடிவு செய்துவிட்டால் என்னதான் செய்வது.

“ஊருக்குப் போயிட்டு வந்து வேலை பாத்துக்கலாண்டா. நீ கவலப்படாத. உனக்கு பாரமா மாட்டேன். அப்புறம் வேணி உன்னை வீட்டை விட்டுத் தொரத்திடுவா” என்றேன்.

“அதுக்கு இல்லடா. நீ என்ன பண்ணப் போறேன்னுதான்...”

“அண்ணன் வர சொல்லியிருக்கான். ஒருவேளை அங்கேயே எதனா சான்ஸ் அமைஞ்சாலும் அமையலாம். சரி நீ கிளம்பு. கைல பணம் இருந்தா குடுத்துட்டு போ. வீட்டுக்கு ஏதாவது வாங்கிட்டு போகணும்.”

சதீஷ் 800 ரூபாயை எடுத்துக் கொடுத்தான். அவனுக்கு விடைகொடுத்துவிட்டு ஈரோடு செல்லும் பேருந்து நிற்குமிடத்துக்குப் போனேன். பத்து மணிக்குத்தான் பேருந்து கிளம்பும். இன்னும் அரை மணிநேரம் இருக்கிறது. பயணச் சீட்டு வாங்கிக்கொண்டு வெளியில் வந்தேன். சிறிது தூரம் நடந்து சென்று ஒரு டாஸ்மாக் கடையைக் கண்டுபிடித்துக் குடித்தேன். மனம் சற்று அமைதியா யிற்று. அங்கேயே அமர்ந்தபடி பழசையெல்லாம் அசைபோட ஆரம்பித்தேன்.

திரும்பத் திரும்ப அந்தக் கூட்டத்தின் காட்சிகள் மனதிற்குள் உருப்பெற்றன. அடர்ந்த உதட்டுச் சாயம் பூசிய பெண்ணும் அட்டகாசமாக உடை உடுத்த பெண்ணும் இப்போது என்ன செய்துகொண்டிருப்பார்கள் என்று யோசித்தேன். ராதா என்ன ஆனாள்? நான் ஊருக்குப் போகிறேன் என்பதால்தான் வேணி சிரித்த முகத்துடன் எனக்குச் சாப்பாடு போட்டாளா? அம்மாவுக்கு இப்போது எப்படி இருக்குமோ. மருந்து வாங்கும் செலவைச் சமாளிக்க முடியவில்லை என்று ரகு போன மாதம் சொல்லியிருந்தான். அவன் வீட்டுக்குப் போய் என்ன செய்வது? சிவா சார் இப்போது என்ன செய்துகொண்டிருப்பார்? ஜேகே, ஜென், நீட்ஷே என்று எதையாவது படித்துக்கொண்டிருப்பார். அவர் சதீஷிடம் சொன்னது திரும்பத் திரும்ப நினைவுக்கு வந்துகொண்டிருந்தது. ‘வாசு நல்ல ஒர்க்கர்தான். ஆனால், அவராக எதுவும் பண்ண முடியாது. புத்திசாலிதான். ஆனால், இங்கிதம் இல்லாதவர். நாங்கள் இல்லாவிட்டால் இந்த ப்ராஜக்ட் நாசமாகியிருக்கும்.’ சம்பிரதாயத்திற்காக அவர் பெயரைச் சொல்லியிருக்கலாம். ஆனால், எனக்கு அது பழக்கமில்லை...

இன்னொரு பாட்டில் வாங்கிக் குடித்தேன். மனம் கொதித்துக் கொண்டிருந்தது. கையில் ஒரு பாட்டில் வாங்கிக்கொண்டு பக்கத்தில் இருந்த ஆட்டோவில் ஏறினேன். “ஐஸ் ஹவுஸ் போகணும்” என்று சொல்லிவிட்டு இருக்கையில் சாய்ந்து உட்கார்ந்தேன்.

“அரவிந்தன்” <aravindanmail@gmail.com>

16 cm x 23 cm colour

# கே.ஆர். மீராவின் இரண்டு நாவல்கள்

இளங்கோ

யூதாஸின் நற்செய்தி & மீராசாது; ஆசிரியர்: கே.ஆர். மீரா; தமிழில்: மோ. செந்தில்குமார்; யூதாஸின் நற்செய்தி - விலை ரூ. 200; மீராசாது; விலை ரூ. 150; வெளியீடு: எதிர், 96 நியூ ஸ்கீம் ரோடு, பொள்ளாச்சி - 642002; தொலைபேசி: +919895005084; மின்னஞ்சல்: ethirveliyedu@gmail.com

தமிழில் நாவல்கள் என்றால் கனதியான நூல்கள் மட்டுமே என்றொரு நம்பிக்கை அண்மைக்காலமாக விதைக்கப்பட்டிருக்கின்றது. ஆகவேதான் பலர் தேவையில்லாத விடயங்களை எல்லாம் சேர்த்து நூற்றுக்கணக்கில் எழுதிக் குவிக்கின்றார்கள். தமிழில் தன் நாவல்களை கனகச்சிதமான வடிவில் எழுதிய சிலரில் அசோகமித்திரனையும் நகுலனையும் நான் நினைவுகூர்வதுண்டு, நாவல்களில் மட்டுமில்லை, குறுநாவல்களிலும் திருத்தமாக எழுதிச் செல்வதில் கைவந்தவர்கள் அவர்கள். ஆனால், அந்த மரபு அவ்வளவாகத் தமிழில் வளர்த்தெடுக்கப்படவில்லை. தமிழில் பின்னமைப்பியல் / பின் நவீனத்துவம் விரிவாகப் பேசப்பட்டு 20-30 வருடங்கள் ஆனதன் பின்னும், இன்னும் நவீனத்துவத்தின் சட்டையை உரித்துக்கொள்ள நாம் தயாராகவில்லை. ஆகவேதான், பல நாவல்கள் சளசளவென்ற நடையில் தொடக்கத்திலேயே நம்மை பிரதிகளிலிருந்து வெளியே தள்ளிவிடவும் செய்கின்றது.

மலையாளத்தை (மட்டுப்படுத்த அளவே வாசித்திருந்தாலும்) பார்க்கும்போது, நாவல்களில் இந்த குறுகச் சொல்லும் மரபு தொடர்ந்து வளப்படுத்தப்பட்டுக் கொண்டிருக்கின்றது போலும். பஷீர், எம்.டி. வாசுதேவன் நாயர் போன்றோரின் அநேக முக்கியமான படைப்புகள் குறைந்த பக்கங்களிலேயே எழுதப்பட்டிருக்கின்றன. அதன் தொடர்ச்சியில் பின்னமைப்பியல் வழங்கிய செழுமையை உள்வாங்கி, சிறந்த படைப்புக்களைத் தரும் ஒருவராக கே.ஆர். மீராவைச் சொல்வேன். மிகச் சிறிய நாவல்கள், ஆனால், அவ்வளவு கனதியானவை.



மாய யதார்த்தம் இலத்தீன் அமெரிக்காவினால் நமக்கு அறிமுகப்படுத்தப்பட்டதை கொண்டாடிய நாம், அதன் பின் அங்கே அலெஜாந்திரோ ஸாம்பிரா போன்ற இன்றைய கால படைப்பாளிகள் எப்படி எழுதுகின்றார்கள் என்பதை ஏறெடுத்துப் பார்ப்பதில்லை. ஆனால், மலையாளப் படைப்பாளிகள் அதைப் பரிட்சித்துப் பார்ப்பதனால் இது சாத்தியமாயிருக்கின்றது போலும்.

மீராவின் 'கபர்', 'அந்த மரத்தையும் நான் மறந்தேன் மறந்தேன்', 'யூதாஸின் நற்செய்தி' போன்ற நாவல்களை வாசிக்கும்போது, மீரா இன்றைய தலைமுறையின் படைப்பாளி என்று மனம் சொல்லிக் கொண்டிருந்தது. குறைந்த பக்கங்கள், ஆனால், அவ்வளவு தெளிவான கதைக் களங்கள். சொல்ல வேண்டியதை நறுக்காய்த் தெரிவித்துவிட்டு நாவல்களை சட்டென்று முடித்துவிடுகின்றார். ஆனால், நமக்கோ அதன் பாரம் தாங்கமுடியாது நாவல் மனதுக்குள் கனக்கத் தொடங்கிவிடுகின்றது.

'யூதாஸின் நற்செய்தி'யில் இந்திரா காந்தியின் நெருக்கடி காலத்தில் தீவிரமாக இயங்கிய இடதுசாரி இயக்கத்தைப் பற்றி மீரா சொல்கின்றார். அதற்கு இயேசுவின் காலத்தைய யூதாஸின் படிமத்தைப் பாவிக்கின்றார். தாஸ் என்கின்ற ஒரு மாவோயிஸ்ட் பொலிஸின் சித்திரவதையின் மூர்க்கத்தால் தன் காதலியும் இயக்கக்காரியுமான சுனந்தாவின் பெயரை உச்சரித்து விடுகின்றான். அதனால்தான் தன் காதலியும் இன்னொரு தோழனும் பொலிஸால் கொல்லப்பட்டுவிட்டார்கள் என்று குற்ற உணர்ச்சியில் தாஸ் காலம் முழுதும் வாழ்ந்து தொலைக்கின்றான் என்பதுதான் இந்நாவலின் அடிச்சரடு.

நமக்குக் கதை சொல்கின்ற பிரேமா ஒரு பொலிஸ்காரனின் மகள். தந்தை சிறு வயதுகளில் இருந்தே இப்படி இளைஞர்களைச் சித்திரவதை செய்யும் கதைகளை பிரேமாவுக்கும் தாயிற்கும் 'வேண்டாம் வேண்டாம்' என்கின்றபோதும் வற்புறுத்திக் கேட்க வைக்கின்றார். அதுவே

எதிர்ப் பண்பாக பிரேமாவை ஒரு நக்சல்பாரியாக மாறும் கனவை விதைக்கின்றது. அந்தக் கனவின் நீட்சியில், தன் தோழர்களைக் காட்டிக்கொடுத்து குற்ற உணர்வில், இப்போது குளங்களில் உடல்கள் மூழ்கின்றபோது அதை தண்ணீருக்கடியில் சுழியோடி வெளியே எடுத்துப் போடுகின்ற தாஸ் என்கின்ற முன்னாள் இயக்கக்காரன் மீது காதல் பித்துப் பிடிக்க பிரேமாவை வைக்கின்றது.

தாஸோ, இந்தக் காதலை நிராகரித்து தானொரு யூ-தாஸ் என்கின்றான். ஆனால், பிரேமாவின் இந்த 15 வயதுப் பித்து, அவரின் 35 வயதுக்கு மேலாகவும் நீள்கின்றது. தாஸே தன் ஒரெயொரு காதலன் என்றபடி அவன் இவரைவிட்டுத் தப்பியோடுகின்ற ஒவ்வொரு பொழுதும் அவனைத் தேடி கேரளத்தில் ஒவ்வொருமூலைக்கும் போய்க்கொண்டிருக்கின்றார்.

தாஸ் உள்ளிட்ட பல இளைஞர்களை மூர்க்கமாய் சித்திரவதை செய்து குளங்களிலும் மலைகளிலும் கொன்று தூக்கிப் போட்ட பொலிஸ்காரர்கள் ஒவ்வொருவருக்கும் காலம் மிகப்பெரும் தண்டனைகளைக் கொடுக்கின்றது. ஆனாலும், சில கொடும் சித்திரவதையாளர்கள் அது தமக்குத் விதிக்கப்பட்ட தொழில்; நாம் அரசுக்கு நன்றியுடையவர்களாக இருந்தோம்; ஆகவே, அப்படி இருந்ததற்காக வெட்கப்படவில்லை என்றும் பிற்காலத்தில் கூறுகின்றார்கள்.

காலம் கொடுக்கும் மிகப் பெரும் தண்டனை பிரேமாவின் பொலிஸ் தந்தைக்குத்தான் எனச் சொல்லவேண்டும். பிற்காலத்தில் நோயால் அவர் அவதிப்படும்போது, கஞ்சாவும் கள்ளச்சாராயமும் விற்கும் அவரின் மகனை கைது செய்து சிறைக்குள் சித்திரவதை செய்துவிட்டு, அவர் தப்பியோடும்போது கொன்றுவிட்டோம் என்று மகனின் சடலத்தைக் கொடுக்கின்றது, பொலிஸ். தன்னையொரு சிறந்த சித்திரவதையாளரும் பொலிஸும் என்றும் காலம் முழுக்க நம்பிக்கொண்டிருக்கும் அவரால் தன் மகனுக்குப் பொலிஸ் இப்படிச் செய்யுமா என்பதை நம்பவே முடியவில்லை. அங்கே நிகழ்வது மாபெரும் வீழ்ச்சி. வாழ்தலின் பெறுமதியே அர்த்தமற்றுபோகும் ஒரு பெரும் மரணம் அவருக்கு.

இந்த நாவலில் பொலிஸின் சித்திரவதை மிக விரிவாகப் பேசப்படுகின்றது. ஆனால், பொலிஸின் அராஜகங்கள் பற்றிய நாவல்ல இது. ஒரு இயக்கத்திலிருந்தவன் தன் தோழர்களைக் காட்டிக்கொடுத்துவிட்டோமே என்று குற்றவுணர்ச்சியில் வாழ்ந்து கொண்டிருப்பது பற்றியே நாவல் முழுதும் பேசப்படுகின்றது, நினைவூட்டப்படுகிறது.

இது கேரளாவின் பின்னணியில் நடக்கும் நாவல் என்றாலும், அரசுக்கெதிராக ஆயுதப்போராட்டங்கள் நடத்திய ஈழம் உள்ளிட்ட எல்லா நாடுகளுக்கும் பொருந்தக்கூடியதே. நம் இயக்கங்கள் ஒவ்வொன்றிலும் இப்படி சந்தர்ப்ப சூழ்நிலையாலோ அல்லது விரும்பியோ காட்டிக் கொடுத்த பலர் இருப்பார்கள். அவர்களின் மனோநிலைகளை ஆழமாகப் பேசி எந்தப் புனைவாவது வந்திருக்கின்றதா? நாம் செய்தது, துரோகி என்றோ தியாகி என்றோ அளவுக்கதிகமாய் ரொமண்டிசைஸ் செய்து கதைகளை உருவாக்கியது மட்டுமே. ஆனால், மீராவின் இந்த நாவலில் நாம் தாஸ் என்கின்ற யூதாஸை மட்டுமில்லை, அவனில் காதல் கொண்டலைகின்ற பிரேமா என்ற பெண்ணின் உளவியலையும் புரிந்துகொள்கின்றோம்.

இங்கே பொலிஸ்காரர்கள்கூட எதிர்நிலையில் வைத்துப் பேசப்படவில்லை. எப்படி இயக்க இளைஞர்கள் நம்மிடையே இருந்து தோன்றுகின்றார்களோ, அவ்வாறே பொலிஸும், நமக்கிடையே எப்போதும் மேலெழும்பிவிடக்கூடிய அதிகாரத்தின் குறுவாட்களுடன் காத்திருப்பவர்கள் என்று, அவர்களையும் விலத்தி வைக்காது உரையாடலில் உள்வாங்கப்படுகின்றார்கள். இவ்வளவு சித்திரவதைகள் செய்தும் பிற்காலத்தில் நோய்வாய்ப்பட்ட பொலிஸ் தகப்பனையும் பராமரித்துக் கொண்டே பிரேமா தன் நக்சல்பாரி காதலைத்தேடி அலைகின்றார். இதில் இருப்பதுதானே மனிதசாரம். இங்கிருந்து உருவாவதுதானே அதிசிறந்த கருணையாக இருக்கமுடியும்?

தாஸ் என்கின்ற யூதாஸ் தன் இளமைக்கால காதலியான சுனந்தா கொல்லப்பட்டதை மறக்காது இருப்பதால்தான், தன் காதலை நிராகரிக்கின்றான் என்று நம்பும் பிரேமா இறுதியில் சந்தர்ப்பவசத்தால் ஒரு நக்சலைட்டாக மாறுவது ஒருபக்கம் நிகழும்போது, சுனந்தாவைப் போல அவளின் அடுத்த தலைமுறை பெறா மகளையும் நில அபகரிப்புப் போராட்டத்தின்போது பொலிஸ் நுட்பமாகக் கொன்று ஆற்றில் போடுகின்றது. ஆகவே, போராட்டங்களும் பலிகளும் ஒருபோதும் முடிவதில்லையென்பதை மீரா நமக்கு மறைமுகமாக உணர்த்துகின்றார். வேறுவேறு களங்கள், தலைமுறைகள். ஆனால், அதே ஒடுக்குமுறைகள், அதே சித்திரவதைகள், அதே திமிர்தெழுதல்கள்!

தாஸும் பிரேமாவும் யாரோ ஒருவர் நீரில் மூழ்கியோ / மூழ்கடிக்கப்பட்டோ சாகத்தான் போகின்றோம். ஆனால், ஒருவர் இறந்தால், அந்த உடலை நீருக்கு வெளியே கொண்டுவர மற்ற ஒருவராவது உயிரோடிருக்க வேண்டுமே என்று குமரகத்தில் ஒரு உடைந்துபோன படகு வீட்டில் தமது நிறைவேறாக்காதல்களுடன் காத்திருக்கின்றனர்.

**மீ**ராசாது...

நம்மைப் பித்துப்பிடிக்க வைக்காத ஏதேனும்



கே.ஆர். மீரா

ஒரு காதலைக் கடந்து வராதவர்கள் அரிதாகவே இருப்போம். காலப்போக்கில் அந்தப் பித்து உதிர்ந்துபோக வாழ்வின் அடுத்த கட்டங்களில் நகர்ந்து போயிருப்போம். ஆயினும் கோடை காலத்து மழை போல சட்டென்று எப்போதாவது ஞாபகங்கள் பொழிய, அதில் தோய்ந்து வெளியே வரும் நுட்பங்களையும் பின்னர் அறிந்திருப்போம். 'மீராசாது'வில் வரும் துளசிக்கு அப்படியொரு காதல்தான் மாதவனோடு வாய்க்கின்றது.

மாதவன், துளசியிடம் காதலை யாசிக்கும்போது, 'நான் ஒருபோதும் உங்களைக் காதலிக்கமாட்டேன்; உங்களைப் பார்க்கும்போது அறை நிறைய 27 பெண்கள் இருக்கின்றார்கள்' என அந்தக் காதலை துளசி நிராகரிக்கின்றார். மாதவன் அதற்கு முன்னரான தன் 27 காதலிகளைப் பற்றி துளசிக்குச் சொல்லி யிருக்கின்றான், கடிதங்களில் எழுதியிருக்கின்றான்.

அப்படி மாதவனின் காதலை மறுக்கின்ற சென்னை ஐஐடியில் சிறப்புத் தேர்ச்சி பெற்ற துளசிதான், அவளுக்கு வினயன் என்கின்ற இன்னொருவனுடன் திருமணம் நடக்கவிருக்கும் முதல்நாளில் மாதவனுடன் சேர்ந்து டெல்லிக்கு ஓடிப்போகின்றாள்.

மாதவன் ஒரு புகழ்பெற்ற பத்திரிகையாளன், பின்னர் தொலைக்காட்சிப் பக்கமும் போய் இன்னும் பிரபல்யம் வாய்ந்தவனாகின்றான். துளசி, மாதவனுக்காய் அனைத்தையும் துறந்து அவன் தாள்களில் பணிந்து போகின்ற ஒரு பெண்ணாய் காதலின் நிமித்தம் மாறுகின்றாள். காதலும் காமமுமாக தொடக்ககாலம் துளசிக்குப் போகின்றது. எப்போதும் சிரிக்கின்ற பெண்ணையே என்னால் நேசிக்கவும் காமமுறவும் முடியும் எனச் சொல்லும் மாதவனின் உக்கிர காதலில் துளசி கிறங்கிக் கிடக்கின்றாள்.

துளசியை ராதை என்றழைக்கும் மாதவன் ஒரு கிருஷ்ணனே. அவனது பெண்கள் மீதான பித்தும் காதல் லீலைகளும் துளசிக்கு அப்பாலும் தொடர்கின்றது. துளசி தன் காதலை நிறைய நம்புகின்றாள். அந்தக் காதல் மாதவனை மீட்டெடுத்து ராதையாகிய தன்னிடம் சேர்க்குமென நம்புகின்றாள். ஆனால், மாதவன் மீண்டும் துளசியிடம் அதே காதலோடு திரும்பவேயில்லை.

இப்போது இரண்டு குழந்தைகளோடு துளசிக்கு பிறந்த வீடுமில்லை, மாதவனுமில்லை. எங்கே அடைக்கலமாவதென்று குழம்புகின்றாள். அவள் டெல்லிக்கு ஓடிப்போவதுடன் அவளின் குடும்பத்தில் இருக்கும் மற்ற சகோதரிகள் உள்ளிட்ட எல்லோரினதும் வாழ்வு பிறகு என்றென்றைக்குமாக மாறிவிடுகின்றது. எல்லோரும் துளசியையே குற்றஞ் சாட்டுகின்றனர்.

துளசி மனம் பிறழ்கின்றாள். மாதவனை எந்தளவுக்கு வெறுக்கின்றாளோ, அதேபோல மாதவனை நேசிக்கவும் செய்கின்றாள். மாதவன் ஒரு நாடக நடிகைக்காய் துளசியை விவாகரத்துச் செய்யக் கேட்கும்போது, பத்திரத்தில் கையெழுத்திட்டுவிட்டு, மாதவனோடு துளசி கலவி செய்கின்றாள். எங்கே நம் குழந்தைகள், இன்னமும் எழும்பவில்லையா என்று மாதவன் கேட்கின்றபோது, இனி அவர்கள் என்றென்றைக்குமாய் விழிக்கப் போவதில்லை, அவர்களை நஞ்சூட்டிக் கொன்றுவிட்டேன் என்கின்றாள் துளசி.

மனம் பிறழ்வுற்ற துளசி மனோநிலைக்காய் சிகிச்சை பெறும் விடுதியில் இருந்து தப்புவதும் மீளச் செல்வதாகவும் இருக்கின்றாள். ஒருநாள் தகப்பனின் காசைக் களவெடுத்துக் கொண்டுபோய் மதுராவில் பிருந்தாவனத்தில், அங்கேயிருக்கும் ஆயிரக்கணக்கான விதவைச் சாதுகளோடு தானும் ஒருத்தியாய் தங்கிவிடுகின்றாள். பிருந்தாவனத்திலும் அதை நடத்துபவர் / பூசாரிகளின் பணப்பிடுங்கல்கள் / பாலியல் வேட்கைகள் என்பவற்றைப் பார்த்து ஒரு இறுகிப்போன பாறையாகத் தன்னைக் கிடத்திக் கடந்து போகின்றாள்.

காலம் கடந்து போகின்றது. மாதவனுக்கும் வயதாகிவிட்டது. அவன் தன் கடந்தகாலத் தவறை உணர்ந்து துளசியிடம் மன்னிப்புக் கேட்க பிருந்தாவனம் வருகின்றான். துளசி எவ்வளவு காதலோடு எப்படி ஒரு காலத்தில் இருந்தாளோ, இப்போது அவ்வளவு வன்மத்தோடு பழிவாங்கக்









செந்தில்குமார்

காத்திருக்கின்றாள். மாதவன் காலில் விழுந்து கேட்கும் மன்னிப்பையெல்லாம் துச்சமெனத் தள்ளி நிராகரிக்கின்றாள். 'காதல் பூதனைப் போன்று என்னைக் கொல்ல முயன்றது. முலைகளில் விஷம் தடவி பால் குடிக்கவைத்தது. நான் விஷம் குடித்தேன். பால் குடித்தேன். அவளுடைய குருதியையும் கூட உறிஞ்சிக் குடித்தேன்' என்கின்றாள் துளசி.

பூதன் என்கின்ற அரக்கி, கம்சனின் சொற்கேட்டு கண்ணனுக்கு முலைப்பால் வஞ்சனையால் ஊட்டி, கொல்ல முயல்கையில் அவள் முலைவழியாக கண்ணனால் உயிருண்ணப்பட்டு மாய்ந்தவள்' என்பது ஒரு ஐதீகக் கதை. அந்தப் பூதனின் விஷத்தை மட்டுமில்லை, குருதியையும் குடித்து இன்னும் உயிரோடு தான் இருப்பது மாதவனைப் பழிவாங்கவே என்கின்றாள் துளசி. ஏனெனில், 'மாதவன் என்னுடையவன். நான் இனியும் அவனைக் காதலிப்பேன். வன்மத்துடன் காதலிப்பேன். காதலால் தோற்கடிப்பேன். புனிதப்படுத்துவேன். இறுதியில் அவனுக்குள்ளேயே இரண்டறக் கலப்பேன்' என்று எப்படி மாதவன் இவளின் காதலைப் பயன்படுத்தினானோ, அவ்வாறே அவனையும் காலம்பூரா பழிவாங்குவேன் என துளசி தனக்குள்தானே சொல்லிக்கொள்கின்றாள்.

இது ஒரு பெண்ணின் உக்கிரமான காதல் கதை. இந்தக் குறுநாவலை வாசித்து முடிக்கும்போது நமக்குள் மாறியிருக்கும் மனோநிலைக்கு எதை உவமிப்பது என்பதும் புரிவதில்லை. இதை எழுதிய மீராவே ஓரிடத்தில் இப்படிக் குறிப்பிட்டுகின்றார்: "உலகில் இரண்டு அல்லது மூன்று துளசிகள் மட்டுமே இருப்பார்கள் என்றே நான் கற்பனை செய்திருந்தேன், 16ஆம் நூற்றாண்டின் கவிஞர் மீராபாயைத் தவிர்த்து. ஆனால், பின்னர் நான் அதிர்ந்துபோகும் வகையில், இந்த உலகம் எண்ணிலடங்காத துளசிகளை உருவாக்கியும் உருக்குலைத்தும் இருப்பதை நான் உணர்ந்தேன். ஒருவேளை, நாம் ஒவ்வொருவரும் நம் வாழ்க்கையில் ஏதாவது ஒரு கட்டத்தில் துளசியாக மாறுவதைத் தவிர்க்க முடியாமல் போகலாம்' என்கின்றார்.

கே. ஆர். மீராவின் படைப்புக்களை சமகால தமிழ் எழுத்தாளர்கள் வாசிக்க வேண்டும் என்று மீண்டும் வலியுறுத்துகின்றேன். மீரா எவ்வாறு கதைகளை நுட்பமாகச் சொல்கின்றார் என்பதையும், அந்தந்த கதைக்கான பாத்திரங்களில் எப்படி ஆழநுழைந்து வாசிக்கும் நம்மையும் கூடவே ஒரு பாத்திரமாக்கிவிடுகின்றார் என்பதையும் நாம் கவனமாக அவதானித்துப் பார்க்கவேண்டும். மேலும், வீணாக வார்த்தைகளையும் பக்கங்களையும் செலவழிக்காது சொல்லவேண்டியதை சுருக்கென்று சொல்லி முடிப்பதோடு, சொல்லும் கதையை பல்வேறு கதைகளோடு எளிதாக இணைத்தும் விடுகின்றார்.

'மீராசாது' குறுநாவலில் மீரா பொருத்தமாக மீராவின் பாடல்களைப் பயன்படுத்துகின்றார். மிகக் குறுகிய, அதேசமயம் உக்கிரமான ஒரு காதல் கதையை அதன் தீவிரம் குறையாது மோ. செந்தில்குமார் அழகாகத் தமிழாக்கியிருக்கின்றார். செந்தில்குமார் தமிழாக்கிய 'கபர்', 'யுதாஸின் நற்செய்தி', இப்போது 'மீராசாது' ஆகியவற்றை வாசிக்கும்போது நமக்கு மலையாளத்திலிருந்து தமிழுக்கு ஆக்கங்களைக் கொண்டுவர, இன்னுமொரு நல்ல மொழிபெயர்ப்பாளர் கிடைத்துவிட்டார் என்பது மகிழ்ச்சியளிக்கிறது.

"இளங்கோ" <elanko25@gmail.com>

# அம்ருதா பதிப்பக வெளியீடுகள்



₹110




₹80



₹120



₹60




₹100




₹100



₹750




₹100




₹150

**அம்ருதா**

#1 கோவிந்த ராயல் நெஸ்ட் அடுக்ககம், 12 மூன்றாவது முக்கிய சாலை 2ஆம் விரிவாக்கம்,
சி. ஐ. டி நகர்-கிழக்கு, நந்தனம், சென்னை-600035
தொலைபேசி: 94440 70000, 044 2435 3555.
மின்னஞ்சல்: info.amrudha@gmail. com. இணையதளம்: www. amruthamagazine. com

# தாத்தா ஒரு மாதிரி

பொ. கருணாகரமூர்த்தி

சம்பு பாதருடைய கொப்பாட்டனின் கிளைவழி முறையில் சகோதரனாக வரும் பஞ்சாபிகேசன் என்பாரின் மகள் லலிதா என்கிற லலிதாகுமாரிக்கு கும்பகோணத்தில் இன்றைக்குக் கல்யாணம். மாப்பிள்ளை ஐடி பொறியாளராம், மும்பாயில் ஒரு குழுமத்தில சேர்ந்து ஆறேழு மாசந்தான், அதுக்குள்ள அமெரிக்காவிலொரு கணினிக் குழுமம் எப்போ வந்து பணியிலே சேருறேள்னு மெசேஜ் அனுப்பிட்டே இருக்குதாம். லலிதாவும் இங்கிலிஷ் லிரறேச்சர் பி.ஏ. முடிச்சிட்டிருக்காள். இணை விரைவில் இணைந்துபோய் அமெரிக்காவில் செட்டிலாகி விடுவார்களாம்.

தாத்தா வீட்டிலே எது விஷேசமின்னாலும் இரண்டு மூன்று நாளைக்கு முதலே குடும்பத்தோடு அமர்க்களமாய் வந்து நின்று, எதிலும் ஒரு குறைவுமில்லாமல் நிறைவாய்ச்செய்துகொடுத்துவிட்டு போகிற அக்குடும்பத்தின் முதற்கொண்டாட்டத்தைச் சாட்டுப்போக்குச் சொல்லித் தட்டிக்கழிக்க முடியாதல்லோ. தாத்தாவின் குடும்பத்தில் பாட்டி மிஸிஸ் சம்புபாதர், மகன் விச்சு, மிசிஸ் மைதிலி விச்சு, மகள் சியாமளா, அவள் புருஷன் + வாண்டுகள் எல்லோருமே திருமணத்துக்குப் போயிருந்தார்கள்.

தாத்தாவுக்கு ஆறு மாச முன்னேதான் லேசாக மைல்ட்ஸ்ட்ரோக்ஒன்றுவந்துகடவாயைக்கொஞ்சம் இழுத்தது. தீவிர வைத்தியத்தில் வாய் குணமாகி, என்ன இப்போ முன்னரைவிடவும் அலாதியாகப் பேசுகிறார். திருமணத்துக்குத் தாத்தாவையும் தொடரியில் கூட்டிப்போவதானால் அவரையும் ஒரு பயணவுறையைப் போலப் பக்குவமாய் ஏற்றி யிறக்கி எடுத்துப்போய் எடுத்து வரவேண்டும். அல்லது அவருக்காக ஒரு சீருந்தையாவது ஏற்படுத்த வேணும். பெற்றோல் விலையில அதுக்கு 3000 ரூபா தனியாக வேணும். அதுக்கு அந்தப் பணத்தை மொய்யாக எழுதிவிட்டால் அவாளுக்காவது பிரயோசனப்படுமேயென்று நடைமுறையில் யோசித்து முடிவெடுத்துவிட்டு, இவருக்கு காலையாகாரமாக இட்லி சாம்பார், மிளகாய்ப்பொடி எல்லாம் எடுத்துவைத்துவிட்டு, அவரை வீட்டில் கன்வேஸ் கட்டிலிலேயே விட்டுப்போனார்கள்.



அவருக்கருகில் அவரது கை எட்டுக்குள்ளாக வேண்டிய அவ்வாரத்துப் பத்திரிகைகள் கல்கி, கலைமகள், விகடன், தண்ணீர்ச் சொம்பு, மூக்குப்பொடிச் சிட்டிகை தலைவலி மாத்திரைகள் எல்லாம் எடுத்துத் தயாராக வைக்கப்பட்டன.

வீதிக்கு எதிர்த்த சாரியில நாலாவது வீட்டில இருக்கிற சாந்தம்மாவை மத்தியானம் ஒரு சுண்டு சாதம் வடிச்சுக்குடுடீன்னு பாட்டி சொல்லி அரிசி, பருப்பு, காய்கறிகள், பச்சமிளகாய், பூண்டு, துருவு பலகை, அரிவாள்மனை எல்லாம் வெளியில் தயாராக எடுத்து வைத்தார்கள்.

காலையில் மாங்கல்யதாரணம், மதியம் உடனேயே ரிஷெப்சனுமாம். சாப்பாட்டுப் பந்திகள், மொய் எழுதுவதற்கான வரிசைகள் நிரம்ப நீளாமலும் இருந்து, தெரிந்தவர்கள் யாராவது இவர்களை பொழுதோட ரயிலடியில விட்டுவிட்டாலோ, அல்லது டாக்ஸியோ ஆட்டோவோ கிடைத்துப் புறப்பட முடிந்தாலோ மாலை ஏழு எட்டுமணிக்குள்ளாற கொஞ்சம் கட்டுச்சாதம் பலகாரங்களோட வந்திறங்கிவிடலாம் என்ற பாட்டி மிஸிஸ் குமுதலேகா சிரையரின் ஊகத்தோடும், அவசியம் கல்யாண வீட்டுக் கட்டுச் சாதத்தையும் பாயாசத்தையும் கொணந்துகொடுத்து அப்பாவுக்கு சுகரை ஏத்தணுமா என்ற சியாமளாவின் நியாயமான கவலையோடும், கல்யாணத்துக்காகக் கொண்டுபோகிற நகைகள் அத்தனையையும் குண்டுமணி குறையாமல் பக்குவமாய்த் திருப்பிக்கொணர்ந்து சேர்த்திடணுமே என்ற அக்கறையில் பயணவுறையை சிக்காராகக் கட்டிப்பிடித்த மருமகள் மிஸிஸ் மைதிலி விச்சுவின் கவலையோடும் ஏழே காலுக்கே டாக்ஸியை வரவழைத்து ரயிலடிக்குப் புறப்பட்டது கல்யாணக் கோஷ்டி.

போதாததுக்கு எதிராத்தில 30 வயதாகியும் வேலைவெட்டி கல்யாணங்காட்சி ஒன்றுமில்லாமல் இருக்கிற ரகோத்தமன் அப்பப்பவந்துதாத்தாவோடபேசிண்டிருக்கப் போறான், என்னமோ தத்துவ விசாரமாம், மணிக்கணக்கா கேட்கிறவாளுக்கு எதுவும் புரியாம இருவரும் சலம்பிண்டேயிருப்பாள்.



ரகோத்தமன் காலையில் எழும்பி, பல்தேய்த்து முகங்கழுவி ப்றெஷாகி, டீயெல்லாம் அவனே போட்டுக் குடித்து, டீஷேர்ட்டை மாற்றிக்கொண்டு வீட்டுவாசலில் வந்துநின்று பள்ளிக்கூடம், காலேஜ், வேலைக்குப் போகிற அலரகவைகள், மடந்தைகள், அரிவையர் தெரிவையர் எல்லாத்தையும் வருடிவழியனுப்பிவிட்டு, ஏறுவெயில் ஏறத் தொடங்கவும்தாத்தா வீட்டுக்குப்போகஎண்ணினான். தாத்தாவீட்டுக்குள் நுழையமுன் அவனுக்கு டீ குடித்த வாயுக்கு ஒரு சிகரெட் பிடிக்கத்தான் மனம் பிரீதிப்பட்டது. ஷேர்ட் பாக்கேட்டில் வெள்ளைச் சல்லி இல்லை, சரி தாத்தாவின் மூக்குப் பொடிச்சரையிலிருந்து ஒரு சிட்டிகை எடுத்துக் கிறுகிறுப்பை ஏற்றுவோம் என்று வீதியைக் கடந்துபோய் கேட்டைத் திறந்துகொண்டு உள்நுழைந்தான்.

தாத்தாவின் இயற்பெயர் சம்புபாதாசிரியர். இவருக்கு திருவாதவூரில் பிறந்ததினாலோ என்னவோ, எந்தக் கட்சியிலும் இல்லாமலே தன் வெறும் விசுவாசத்தினால் அரிமர்த்தன பாண்டியனுக்கே மதியுரைக்கவல்ல முதலமைச்சராக சேவகம் செய்த பாரெங்கும் கியாதியான மாணிக்கவாசகரின் பெயரை விடுத்து, சம்புபாதாசிரியர் எனும் பெயரைச் சூடிய தாத்தாவின் அப்பாவிடம் நிச்சயம் ஒரு நியாயமான காரணம் இருந்திருக்கத்தான் வேண்டும். ஆனால், அந்தப் புரட்சிக்காரக் கொள்ளுத் தாத்தாவிடம் யாரும் அக் காரணத்தை இனி விசாரித்தறிந்துவிட முடியாது, சம்புபாதருக்கே இப்போ 73 அகவைகளாகுது... ஜீவருமிருந்தால் செஞ்சுறியும் அடித்திட்டுத் தண்டால் எடுத்துக் கொண்டிருந்திருப்பார்!

தாத்தா பிரிட்டிஷ் காலத்து மெட்றிகுலேஷன் பாஸ் பண்ணிய விவேகமான மனிதர். தேச கால வர்த்தமான நடப்புகள், சமூக உலக ஒழுங்குகள் அறிந்தவர். என்ன சனாதன சாங்கியங்களில் இன்னும் கொஞ்சம் ஒட்டுதலிருக்கு. ஆனாலும் யாரிடமும் அவற்றை எதிர்பார்க்கவோ நிர்ப்பந்திக்கவோ மாட்டார். அரசு ஊழியராக பொதுக்கட்டுமானத் துறையில் இருந்தகாலத்தில் அவரது நண்பர்கள் அவரைச் சம்புவென்றோ சாம்புவென்றோ அழைக்க, இவரைப் பிடிக்காதவர்கள் மறைவிலும் தன் காதுபடவும் `சிரையர்' என்று அழுத்தமாகச் சொல்வார்களென்றும் தாத்தாவே சொல்லியிருக்கிறார்.

``குட் மோர்ணிங் தாத்தா...'' என்றுகொண்டு எட்டவிருந்த நெகிழி நாற்காலியைத் தூக்கி அவர் அருகில் போட்டுப் பதுமையாக அமர்ந்தான். பதிலுக்கு இவனுக்கு ``குட் மோர்ணிங்'' சொல்லிவிட்டு, இடைவெளி இல்லாமல் வீட்டில் எல்லோரும் இன்றைக்கு கும்பகோணம் பஞ்சாபிகேசன் வீட்டுத் திருமணத்துக்குப் போயிருப்பதை விவரித்தபோது, அப்போதுதான் கேள்விப்படுவதைப் போலச் சுவாரஸியமாய்க் கேட்டான். இடையே ஸ்டூலில் தனித்திருந்த அவரது மூக்குப் பொடிச்சிட்டியை உரிமையுடன் நகர்த்தி ஒரு சிட்டிகை எடுத்து இழுத்துக்கொண்டான். அது தும்மல் வருவதைப்போல அவன் முகத்தைக் கோணவைத்துப் பாவனை காட்டிவிட்டுப் போய்விடவும், இரண்டாவது தடவையும் எடுத்துச்சற்று ஆழமாக இழுக்கவும் இம்முறை நிஜமாகவே தும்மல் வரவும், எழுந்துபோய் வாசலருகில் தாழ்வாரத்தில் தும்மிவிட்டு மீண்டும் கதிரையில் வந்தமர்ந்து தாத்தாவின் விபரணத்தை முன்னரைப் போன்ற சுவாரஸியத்துடன் கேட்டான். அதையும் விட்டால் அவனுக்குத்தான் வேறுவேலையே இல்லையே.

தாத்தா அவனுக்குச் சற்றுச் சுவாரஸியத்தைக் கொடுக்குமேயென நினைத்தாரோ... மனமிரங்கி

இப்போது தன் `டாப்பி'க்கை மாற்றியமைத்தார்.

"ஏண்டா ரகு எப்போதான் நீ எங்களுக்குக் கல்யாணச் சாப்பாடு போடப்போறே... பருவத்தில் பயிர் செய்னு இருக்கு, எதுக்கும் பருவத்தைத் தப்ப விட்டிடாதப்பா. பார்த்திட்டிருக்கப் பறந்துபோயிடும்."

தாத்தா அக்கறையாக அவனுடைய கல்யாணத்தைப் பற்றி விசாரித்ததில் பொங்கிய சந்தோஷம் பொங்கிச் செல்லமாய் அவனது உட்கபாலத்துள் மொத்தியது. அவனுக்கும் உள்ளூரப்புளகந்தான் என்றாலும், அதுபற்றி அக்கறைப்படாதவன் மாதிரிப் பிகு பண்ணினான். தாத்தா திரும்பவும் அதையே அழுத்தவும்...

"ஒரு சின்ன வேலைகூடக் கிடைக்காமல் எப்படி மாமா ஒரு பொண்ணை ஆத்துக்கு இட்டாந்து... அவளையும் நம்மகூடச் சேர்த்துவைச்சுப் பட்டியடைக்கறது..."

ரகோத்தமன் எல்லோரையும் போலத் `தாத்தா' என்று சொல்லாமல் `மாமா' என்றது தாத்தாவுக்கும் புளகமாயிருந்தது.

"அந்த மாப்பிள்ளை நாயக்கன்பட்டியில (தஞ்சாவூர்) இருந்து பேசிவந்த பெண்ணை வேணாமின்னிட்டியாமே ஏன்டா... வர்ற பொண்ணு ராசியானவளாயிருந்தா அவளது ராசியின் வெளிச்சத்துக்கே உன் வீடு துலங்க ஆரம்பிச்சிடும்பா... உனக்கு வேலை அந்தஸ்த்தெல்லாம் கெடைக்க வெச்சு எங்கேயோ உயரத்துக்குத் தூக்கின்டு போயிடும்டா... இப்படி வலிய வர்ற மகராசிகளையெல்லாம் தட்டிக் கழிச்சிண்டேயிருந்தா ஒனக்கு ஒரு புது வழி திறப்பதெப்போ... கொஞ்சம் புத்தியோட சிந்திக்கணும்டா... எனக்குக்கூட மாமியைக் கட்டிண்டப்புறந்தான் ஜாப்பே பெர்மனென்டாகி புரோமோஷன், டிரான்ஸ்பர் எல்லாம் ஒண்ணாகக் கிடைச்சிச்சு..."

புதுக்கோட்டையில எலெக்டிரிகல் ஃபோமனாக இருக்கிற தாத்தாவின் ஃப்ரெண்டு ஒருத்தர்தான், "பத்தில செவ்வாயிருக்கிற பொண்ணுவேய். 26 நடக்குது... வரன் திகையாம அலையறாங்க... நல்ல வசதியான குடும்பம்வேய். சீர் சினத்தி ஒண்ணுக்கும் கொறைவில்லை. ஏதாவதொரு டிகிரி முடிச்சிருக்கிற, குடிகூத்தி இல்லாத பையனா இருந்தாச் சொல்லும் புண்ணியமாய்ப்போம்வேய்" என்று கேட்டிருந்தார்.

``ஒரு நல்ல பையன் இருக்கான்வேய்... டிகிறியெல்லாம் முடிச்சிருக்கான். தன்னை மார்க்சிஸ்ட் என்கிறான் அப்பப்ப. கொஞ்சம் கொம்யூனிசமும் பேசுவாப்பல பரவாயில்லையா..."

"என்ன இஸமோ இளவோ... எதென்னாலும் பேசட்டும். அதெல்லாம் பின்னால அவள் பாத்துப்பாள். இந்தக் காலப் பொண்ணுங்களுக்கா தெரியாதா பசங்க வாயை அடைக்கிற வித்தை" என்றவருக்கு, சம்பந்தத்தில நேரடியாத் தன்னுடைய பங்களிப்போ தலையீடோ இருக்குன்னா மறுத்திடுவாங்கிறதுக்காகத்தான் ஒதுங்கி நின்று, ரகோத்தமன் வீட்டைக் கைகாட்டிவிட்டவரே தாத்தாதாங்கறது ரகோத்தமனுக்குத் தெரியாது.

"பொண்ணு வீட்டுப் பணத்தில முகூர்த்தம் வைச்சு, தாலி வாங்கி, ஹோமம் வளர்த்து, அவ வீட்டுப் பணத்தில கல்யாண மண்டபம் பிடிச்சு, சமையல் போட்டு, பந்திபோட்டுக் கல்யாணம் வைச்சா மாப்பிள்ளைன்னு எனக்கு அங்கே என்னதான் மரியாதை இருக்கும். காலத்துக்கும் மாமன் மாமி சொல்றதையே கேட்டிட்டு ஒழுக்குச் சட்டி மாதிரி அவங்க வைக்கற இடத்திலேயே கிடந்துண்டு அட்ஜஸ்ட் பண்ணிட்டு வாழணும். அதெல்லாம் என்னால முடியாது, நேக்குப் பிடிக்காது. அப்படியொரு வாழ்க்கைன்னா வேண்டாம் மாமா..."

"நீ சொல்றதிலுள்ள டிஸ்-எஸ்டீம் ஃபீல் எனக்குப் புரியாமலில்லை ரகு. அவங்க கொஞ்சம் வசதியான ஆட்கள்போல இருக்கு. அவங்கப்பா அரிச்சந்திரனே State Bank of Indiaஇல எக்கவுண்டன்டாக வொர்க் பண்ணிட்டு ஏர்லி றிடையர்மென்ட் எடுத்திட்டு, சவூதிக்குப் போய் SaudiRyadBankகில 5 வருஷம் வொர்க் பண்ணிட்டு வந்திருக்காரு. ஏகப்பட்ட பணமிருக்கு. ஆனா அவாகிட்ட அந்தத் திமிரெல்லாம் பேச்சில நடப்புல கிடையாது, ரொம்பப் பௌவ்யமான மனுஷாள், தம் பொண்ணுக்கொரு வரன் திகைஞ்சு வந்தாப் போதுமின்னு தவமாய்த் தவமிருக்கா... பொண்ணோட அண்ணா ஒருத்தன் ஸ்டேட்ஸில வேற இருக்கானாம். பார்த்தியா ஒனக்கு வரப்போற பாக் - சப்போர்ட்டை.

"நீயும் நான் மார்க்சிஸ்ட்டு, சீதனம் வாங்கறதெல்லாம் மானுட விரோதம் அப்பிடின்னு வரட்டுத் தத்துவங்கள் பேசி முரண்டு பண்ணாத... மார்சிஸத்திலகூட வெல்த் ஓரிடத்தில குவியக்கூடாது எங்கறதுதானே உங்க டொக்றீன், குவியிற வெல்த் இல்லாதவங்க தேவைக்கு மூவ் ஆகணும், அதாவது உபரியா நிக்கிற மலைகளால மடுக்கள் நிரவணும்... எதுன்னாலும் ஐஸ்வர்யமோ மிடிமையோ வாறதுன்னா லோகத்தில எல்லாருக்கும் சமமாக வரணும், அப்பிடித்தானே..."

இப்போது ரகோத்தமன் அவரை முறைத்தான்.

"சாரிப்பா... சும்மா டமாஸு பண்ணினேன், மாற்றங்கள் காலத்தோட வந்தேயாகும். அதுதான் என்னோட இன்ரபிறிடேசனும். ஓரிடத்தில இருக்கிற வெல்த்தை அவங்களா மனம் ஒப்பித் தர்றப்போ அதை வாங்கி யூரிலைஸ் பண்ணி ஒருத்தன் மேல் வாறதுங்கறதுதான் புத்திசாலித்தனம். அதொன்னும் பெரிய தப்போ மானிட அறங்களுக்கு விரோதமானதோ இல்லப்பா...

"அப்படி உதவுவதை இஸ்லாத்தில அனுமதிச்சிருக்கு, ஒருத்தனுக்கு அவனுடைய வியாபாரம் மேலவர உன்னால உதவ முடியும்னா

உதவு. அந்த உதவிக்காக அவங்கிட்ட வட்டி வாங்காத அப்படீன்னு. அப்படி ஈமானுள்ள ஒரு மிக்கோன் மீமகன் உதவுறான்னு எடுத்துக்கோ... மீன் படுறப்போ சாதுர்யமா உன் வலையை வீசிக்கோ... பி பிராக்டிகல் மேன்.

"கொம்யூனிஸ்ட் எங்கிறே... அப்புறம் நீயும் பிஸினெஸ் அன்ட் ஃபினான்ஸ் மனேஜ்மென்ட்தானே படிச்சிருக்கே... ஃபினான்ஸ் எவன் கையில இருக்கு. அது கப்பிட்டலிஸ்ட் கையிலதான் இருக்கு, இருக்கும். உனக்கு எதுக்கு அவங்க சமாச்சாரம்.. பார்த்தியா மாற்றம் உன்னிலேயே ஆரம்பிச்சு விட்டிருக்கறத... இட்ஸ் த சேஞ்ஞ்பா... ஐ இன்சிஸ்ட் ஓன்."

"என்ட ரிசல்ட்ஸுக்கு அதுதான் படிக்கக் கிடைச்சுது. அதுநம்பஎடியுகேஷன்சிஷ்டத்திலஇருக்கிற கோளாறு மாமா... அதுதான் பேசிக்கில இருந்து முழு சிஸ்டத்தையே மாற்றி அமைக்கணுங்கறோம்."

``அதை விடுத்து நாலு சிவப்புப் பழுப்புப் புத்தகங்களை அதிலே என்னதான் இருக்குன்னு பார்க்க படிச்சு வைக்கலாம். தப்பில்லே. நான் குரானும் பைபிளும் முழுக்கப் படிச்சிருக்கேன், அதில ஒண்ணுந் தப்பில்லே. கோட்பாடுகளுக்குள்ளயே சிக்குண்டு அதுக்குள்ளயே கிடந்தாயானா அதுலேயிருந்து விடுதலையாக நோக்கு வயசாகிடும் கண்ணா.

"கோட்பாடுகள், தத்துவங்கள், சித்தாத்தங்கள் என்கிற ஓடங்கள் மாதிரி, எல்லாம் எமக்கு ஒரு ஏரியைக் கடக்க மட்டுந்தான் தேவை, கடந்தப்பறமும் அவற்றை முதுகில சுமந்திட்டுத் திரிய வேண்டியதில்லைன்னு ராகுல சாங்கிருத்தியனே சொல்லியிருக்கார். படிச்சிருப்பே. மானுடத்துக்கு உடனடிப் பயன் மதிப்போ பொருளியல் வார்த்தையில் இலாபமோ தராத எந்தச் சிந்தாந்தத்தையும் காவிட்டிருக்க வேண்டியதில்லை என்றுதான் நானும் நினைக்கிறேன். நீகூட இப்பவே கொஞ்சம் கிளெவரா யோசிச்சுத் துணிவா முடிவுகளை எடுக்கலாம்... லோகமே லௌகீகம். அதுவே லௌகீக சமாச்சாரங்களைச் சுற்றிட்டுத்தான் இயங்குது. எந்தப் பெத்தவங்களும் தம் குழந்தைகளைத் தாழ்ந்துபோக விட்டிட மாட்டாங்க. நம்மளோட ஒப்பிட்டா நாயக்கன்பட்டிக்கரங்க ஒரு எலிட்ஃபமிலி, உன்னை நல்லாய்க் கவனிச்சுப்பாங்க... பேசாம ஒத்துக்கிடு... ராஜா மாதிரி வாழலாம்... சீரியஸாத்தான் சொல்றன். மகிழ்ச்சியான தாம்பத்திய வாழ்க்கையை பூரணமா அனுபவிக்கிறதுக்கு உனக்கு இளமையும் கொஞ்சம் வேணும்பா. முப்பதிலேயிருந்து நாப்பது கண்ண மூடித் திறக்கக்குள்ள வந்திடும். தத்துவங்களைப் பேசிண்டே இளமையைத் தொலைச்சிட்டேன்னா அப்றம் உன்னை யாரும் சீண்டமாட்டாங்க. அதுக்கு மேல தாம்பத்தியமும் நீ நினைக்கிற மாதிரிச் சுவைக்காது... வாழ்க்கையெல்லாம் வண்வே றூட்டப்பா திரும்பி வராது, இன்னொருமுறை வாழ்ந்து பார்க்க முடியாதப்பா... பென்ஷன் வயசிலே அப்புறம் இப்பிடிப் பண்ணியிருக்கலாமே அப்படி வாழ்ந்திருக்கலாமே என்று கோபுரத்து உச்சியில ஒக்காந்த மூஞ்சூறாட்டம் கிடந்து யோசிப்பே..."

`மின்னல் போலாகும் இந்த வாழ்க்கையே...' என்ற சினிமாப் பாட்டை லேசாகக் ஹம்மிங் செய்து பார்த்தார். சுரத்தை மேலே ஏற்றப் பிராணகோஜங்கள் ஒத்துழைக்கவில்லை, விட்டுவிட்டார்.

ரகோத்தமன் இரண்டு கைகளையும் மேலே உயர்த்தி சோம்பேறித்தனமாய் ஒரு கொட்டாவி விட்டான்.

"நன்னா யோசிச்சுப் புத்திசாலித்தனமான முடிவாய் எடு கண்ணா."

"இப்போ இன்னிக்குக் கும்பகோணத்தில கல்யாணம் பண்ணிக்கறாளே லலிதா செவப்பா, நெகுநெகுன்னு உயரமா, அழகாயிருப்பா. உனக்கு மாட்ச்லெஸ் மாட்ஸாயிருப்பா. அவள் அப்பன் பஞ்சாபிகேசன் என்னைக் ஹொஸ்பிட்டல்ல ஸொகம் வெசாரிச்சு வந்தப்போ நானும் மெல்ல உனக்கு லலிதாவைக் கொடுத்தா என்ன, ரொம்ப மரியாதையான குடும்பத்துப் பையன் அப்படீன்னு கேட்டுப் பார்த்தன். அவனும் உனக்குத்தான் ஜாப் எதுவும் இல்லையே, உத்தியோகம் புருஷ லக்ஷணம்னு சொல்லி மறுத்திட்டான்பா... ஐட்றைட் மைபெஸ்ட்... ரொம்பக் கொம்பெல் பண்ணப்போ `வேணுன்னா நீர் உம்மோட மகள் சியாமளியைக் கொடுமேன்'னப்போ என்னால மேல அவன வலியுறுத்த முடியல்ல. அவ பொறந்ததில இருந்து `பக்கத்தாத்து ரகு அண்ணா... ரகு அண்ணா'ன்னு ஒரு சகோதர பாசத்தோட பழகிட்டிருக்கான்னு வெளங்க வைச்சேன்... எதையும் அவனால புரிஞ்சுக்க முடியலை..."

பேசிக் கொண்டிருந்ததில் ரகோத்தமனுக்கு மீண்டும் டீயும் நிகொட்டீன் தாகமும் எடுத்தன, வெட்கத்தை விடுத்துத் தாத்தாவிடம் கேட்டான்:

"மாமா இருந்தால் ஒரு 2 றுபீஸ் கொடுங்களேன், அடுத்த வாரம் தந்திடறேன்..."

"உனக்கு அது சிகரெட்டுக்குத்தான்னு நேக்குத் தெரியும்... அந்த ஹால்ல சுவத்து ஹாங்கர்ல தொங்கிற என் ஜிப்பா பாக்கெட்டில பர்ஸிருக்கு, அதில 10 றுபீஸ் எடுத்துக்கோ, வரும்போது எனக்கு ஒரு ஹின்டுவும் மூக்குத் தூளும் வாங்கிட்டு வா..." என்றார்.

அதிலிருந்த 10 ரூபாத் தாளை எடுத்துக்கொண்டு ரகோத்தமன் பிரதான வீதியைக் கடந்து அம்பேத்கார் லேன் முக்கிலுள்ள சிறிய ஹொட்டலை நோக்கி நடந்தான். தாத்தாவுக்குத் தானும் இளமையில் சிலகாலம் படிப்பு முடித்து வேலையில்லாமல் இருந்தபோது டீக்கும் நஷ்டாவுக்கும் சிகெரெட்டுக்கும் சில்லறை இல்லாமல்த் தவித்தது நினைவுக்கு வந்து மறைந்தது.

ரகோத்தமன் இரண்டு வடையும் டீயும்

சாப்பிட்டுவிட்டு ஒரு சிஷேர்ஸ் பாக்கெட்டும் வாங்கிப் புகைத்துக்கொண்டு தாத்தாவுக்கும் இரண்டு வடைகளும் எடுப்பு டீயும் எடுத்துவந்தான்.

டீயைக் குடித்து வடையைச் சாப்பிட்டு ஹின்டு பத்திரிகையைப் பாதியைப் படித்து முடிக்கையில் தாத்தாவுக்குக் கண்கள் சோர்ந்து குறாவிக்கொண்டு வந்தன. கொஞ்சநேரம் தூங்கிப்போனார். கண்விழிக்கவும் ரகோத்தமன் ஹின்டுவை வைத்துப் புரட்டிக் கொண்டிருந்தான், இவர் கண் விழித்ததைக் கண்டதும் சொன்னான்:

"அந்த மாப்பிள்ளை நாயக்கன்பட்டிப் பொண்ணு வீட்டுக்காரங்க அடிக்கடி ஆட்களை அனுப்பிக் கொண்டிருக்காங்கடா எதனாச்சும் சொல்லுடான்னு அப்பாவும் தினம் சத்தம் போடுறாரா... நானும் ஜாதகம் பொருந்திச்சின்னா மேற்கொண்டு ஆகவேண்டியதைப் பாருங்கண்ணு வீட்டில சொல்லிட்டன் மாமா."

"வெறி குட் டிஸிசன்பா... நீ அமோகமா இருக்கப்போறே... கோ... எஹெட், டோன்ட் லுக் பாக்."

ரகோத்தமன் பேசிக் கொண்டிருந்திட்டுப் போய்விட்டான். வீட்டில பாட்டி, பிள்ளைகள், பேராண்டிக் குருமானுகளின் இரைச்சல் எதுவுமில்லாமல் வீடே அமைதியாக இருக்கவும் தாத்தாவுக்கு மீண்டும் தூக்கம் தூக்கமாய் வந்தது. இடையில் எழுந்து இரண்டுதரம் பாத்றூம் போய்வந்தார், மூணுதரம் மூக்குப்பொடி போட்டார்.

சமையல்கட்டிலிருந்து இடைக்கிடை பத்திரங்கள் தட்டுமுட்டுப்படுற சத்தமும் தேங்காய் துருவுற சத்தமும் வந்தன. சாந்தம்மாள் வந்திட்டாள்போல.

"மாமா அந்த மாப்பிள்ளை நாயக்கன்பட்டிப்பாட்டி ஜாதகம் பிரமாதமாய்ப் பொருந்தியிருக்குன்னு வந்திருக்காம்... எப்போதைபரிசம்போடலாம்னு அவசரப்படுத்தறாங்க மாமா..."

இதைச்சொல்லிவிட்டு ரகோத்தமன் லேசாய் வெட்கப்பட்டான்.

``பார்த்தியா நான் சொல்லலை... உனக்கு இனி நல்லகாலம் பொறந்தாச்சு. இனி நீ தொட்டதெல்லாம் தொலங்கப் போகுது... இனியுன் வாழ்க்கையே ஒளிவெள்ளமாய் ஜொலிக்கப்போவுது பார்..." எனவும் மகிழ்ந்துபோன ரகோத்தமன் "என்னை ஆசீர்வதிங்க மாமா" என்று வந்து அவர் பாதங்களைத்தொடவும் அடிமனதிலிருந்து கவித்துவத்துடன் வாழ்த்தினார்.

"எல்லாம் வளம் நலம் பெறும்... ஜெயம் நிஜம் வரும். அமோகமாக இருப்பே நீ ராஜா."

"தாங்ஸ் மாமா."

சிவபாதர் தாத்தாவுக்கு மீண்டும் புல்லரித்தது.

"அவங்களுடை பொருளையோ ஆஸ்தியையோ அபகரிச்சிட்ட மாதிரி எதுக்கு நீ எடுத்துக்கணும், அவங்க உனக்கொரு பிடி கொம்பைக் நீட்டுறாங்க; நீ அதைப்பிடிச்சிட்டு மேல எம்பி வர்றே... அதில ஒரு கோட்பாட்டுச் சீரழிவும் இல்லப்பா... நடைமுறைதான்."

தங்கம் சவரன் 600 தான் விற்றது, கல்யாணச் செலவுகளுக்கென்று அவர்களுக்கு இனாமாக 10 லட்சம் நல்கியது அரிச்சந்திரன் குடும்பம்.

`காலத்தோட என்னதான் மாறாது' என்று மனதிலே நினைத்துச் சிரித்துக்கொண்டார். ஜாம்ஜாமென்று ரகோத்தமனுக்கும் பிரியகரிக்கும் கல்யாணம் நிறைவேறியது. பிரியகரி உலகம் தெரிந்த சூட்டிகையான பொண்ணு, புதுக்கவிதைகள் எல்லாம் எழுதுவாள்.

கல்யாணத்துக்கு பந்தல்போட அரிச்சந்திரன் உபரியாக அனுப்பிவைத்த வேலைக்காரர்களில் இரண்டு பேரை ரகோத்தமன் இட்டுவந்து தாத்தா வீட்டின் பின்கொல்லையைக் கொத்துவித்துப் பயற்றையும் வெண்டியும் ஊன்றுவித்தான்.

திருமணம் நடந்தேறியதும் இணையர் ஒருமாதம் ஹனிமூனுக்கு சிம்லாவுக்கும் ஆக்ராவுக்கும் போய்த் திரும்ப, மாமன்காரன் ரகோத்தமனுக்கு தனக்குச் செல்வாக்குள்ள குழுமமொன்றில் ஃபினான்ஸியல் கொன்ஸல்டன்ட் ஆக வேலையும் தயார் பண்ணி வைத்திருந்தார்.

இரண்டாம் ஆண்டில் அவர்களுக்குப் பெண் குழந்தையும் பிறந்தது. அனைத்து ஐஸ்வர்யங்களுடனும் பிறந்த மஹாலக்ஷ்மியல்லா... அவளுக்கு ஐஸ்வர்யாவென்றே பெயரும் வைத்தார்கள். அந்தத் தெருவுக்கே செல்லக் குழந்தை அவள்.

தத்தித்தத்தி வளர்ந்து வரவும் முன்பள்ளி போய்வந்தாள். படிப்பிலும் டான்ஸிலும் சுட்டி. இன்னும் போதாததுக்கு குதிச்சுக்கொண்டு டேக்வொன்டோ, யோகா வகுப்புகளுக்கும் போய் வந்தாள். பசளைமேட்டில வளர்ந்த செங்கீரை மாதிரி அப்படியொரு வளர்த்தி. பளிச்சென்று இருப்பாள். கால்ல ஸ்கேட் றோலரைக் கட்டிக்கொண்டு எல்லா இடத்திலும் நிற்பாள்.

முந்தாநாத்துத்தான் பொறந்து லோகத்தைப் பார்த்து அலங்க மலங்க முழிச்சிண்டிருந்தாள் போலிருக்கு... இப்போ பத்தாவது படிக்கிறாப்பல.

அயல்ல படிக்கிற மற்றக் குழந்தைகளுக்கு அப்பாவைப் போலவே கணக்கு, இங்கிலிஷ் எல்லாம் சொல்லிக் கொடுப்பாள். சமூகசேவகியான அவளுக்கு சம்புபாதர் தாத்தா பாட்டி மேலயும் அப்படியொரு பாசம், வர்றப்போவெல்லாம் அவங்க கழுத்தைக்கட்டிக் கொஞ்சாமல்ப் போகமாட்டாள்.

மாலையானதும் லேசான மழையொன்று வந்திறங்கி ஊரின் தூசை அமர்த்திவிட்டுச்செல்ல, காற்றில் சீதளம் தவழ்ந்து கொண்டிருக்க, மாலை சுறுசுறுப்பும் பொலிவுமானது. பின் மெல்லமெல்லச் சூரியன் தன் இறுதிக் கதிர்களையும் இழுத்து மடித்து வைத்துக்கொண்டான்.

எட்டரை மணியானது. டாக்ஸியொன்று கல்யாண விருந்தினர்களை மெல்லவந்து இறக்கிவிட்டுப் போனது. ரகோத்தமன் தொலைக்காட்சியில் புதிதாக அட்சர சுத்தமாகச் செய்திகள் வாசிப்பவளின் உதட்டசைவுகளை அதிசயித்துப் பார்த்து ரசித்துக் கொண்டிருந்தான்.

டாக்ஸியை விட்டிறங்கி நேராகச் சமையற்கட்டுக்குள் நுழைந்த பாட்டி திரும்பிவந்து, ``ஏனுங்க எதுவுஞ் சாப்பிடல்லே எல்லாம் அப்படியே வெச்சுவெச்சாப்பல கெடக்கு... பசி கெடந்து ப்ளட் ஷுகர் கொறைஞ்சு தலையைச் சுற்றி விழுந்திட்டா அப்புறம் என்னாவது...''

“என்ன சொல்றே நீ... நான்தான் ஜோராய்ச் சாப்பிட்டேனே... எதிர்த்தாத்து ஐஸ்வர்யா போட்டுத் தந்தாளே...”

“எந்த ஐஸ்வர்யாங்க...”

``உதில கும்பகோணம் போய்வர்றதுக்குள்ளாற ஐஸ்வர்யாவை மறந்துட்டே பார்... அவதான் ரகோத்தமன் பொண்ணு. அவன்ட கலயாணத்துக்குக்கூட நாமபோய் அக்ஷதை போட்டோம்ல, ஐஸூ ருதுவானப்போகூட அவன் பொண்டாட்டி பிரியகரியோட சேர்ந்துவந்து நம்பகால்லதானே விழுந்து, `மாமாவும் மாமியும் நம்மாத்துக்கு வாங்கோ... ஐஸூ ருதுவாயிட்டா... குழந்தைக்குத் தண்ணி வார்க்கப் போறோம் வந்து ஆசீர்வதியுங்கோ'ன்னு நம்பளை இட்டுப்போனாளே... அதுக்குள்ளாற மறந்திட்டியாடி ஐஸ்வர்யாவை... மண்டுக் கெயவிக்கு வரவர ஞாபகமறதி ஜாஸ்தியா யிடுத்து.”

தாத்தா தன் தலையில் அடித்துக்கொண்டார்.

“நேக்கு இன்னிக்கு ஸ்கூல் இல்லைத் தாத்தா ஃப்ரீயாத்தான் இருக்கேன்னு மதியம் அவளா வந்து எனக்குன்னு எல்லாத்தையும் பார்த்துப் பார்த்துச் சமைச்சாளே... மணத்தக்காளி வத்தக்குளம்பு, சேனைக்கிழங்குக் கூட்டு, பொன்னாங்காணிக் கீரை, சேப்பங்கிழங்கு வறுவல், காய்கறிப் புரட்டல் தயிர்ப் பச்சடி, மிளகு ரசம், அப்பளம்னு ஒரு பருக்கை இலையில்விடாமச் சாப்பிட்டதுக்கு... என் சமர்த்துத் தாத்தான்னு என் தலையை வேற தடவி `இன்ஸூலினை மறந்திடாதீங்க'ன்னுட்டுப்போனாளே என்ன சொல்றே நீ... நான் சாப்பிடலையா...”

“என்னங்க எந்தச் சின்னப்பொண்ணு ஒங்களுக்கு சமைச்சுப்போட்டா... அப்போ சாந்தம்மாள் வரல்லியா...” எனவும், இலேசான சந்தேகத்தில் தன் கையைத் தூக்கிச் முகர்ந்து பார்த்தார்.

“என்ன சேப்பங் கிழங்கை வறுத்தாளா... அதைக் கண்ணால் பார்த்தே மாமாங்கமாச்சே... டேய் விச்சு... இந்த அப்பா என்னவெல்லாம் சொல்றார்னு கேளடா... ரகோத்தமன் பொண்ணு ஐஸ்வர்யா மதியம் வந்து தனக்கு வகைவகையாய்ச் சமைச்சுப் போட்டாளாம். தானும் சப்புக்கொட்டித் துன்னாராம்.”

பொதியுறைக்குள்ளிருந்த நகைப் பெட்டியை அலமாரியுள் வைத்துப்பூட்டப்போன மிஸிஸ் மைதிலி விச்சுவுக்கு, `இனி இந்தாத்து நகையெல்லாம் மைதிலிக்குத்தான்' என்று யாரோ சொல்வதுபோல்க் கேட்கவும் தலைவாசலுக்குத் திரும்பி வந்தாள்.

விச்சுவின் குழந்தை அம்பாவும் சியாமளியின் பையன் அபயனும் போய்த் தாத்தாவின் மடியில்த் தாவி ஏறினார்கள்.

“ஏய் சியாமி சமையற்கட்டில... இன்னும் கெட்டியாய்ப் பால்ப் பாயாசமிருக்கு. இந்தப் பசங்களுக்குத்தான் கொஞ்சம் சூடுபண்ணி ஊத்திக்கொடேன்” என்றார் தாத்தா.

“நாங்கள் திரும்பத் தாமதமாயிடுச்சா... கொஞ்சம் மனம் கலங்கிப் பதகளிச்சிட்டா போலயிருக்கு... நாளைக்கு நோர்மலாயிடுவார். ஒண்ணும் பயப்பட வேணாம்மா...” என்ற விச்சுவை, பாட்டியும் மிஸிஸ் மைதிலி விச்சுவும் சியாமளியும் நம்பிக்கையுடன் பார்த்தனர்.

தாத்தா வீட்டில் அமர்க்களமாயிருக்கே... கல்யாணக் கோஷ்டி திரும்பியாச்சுப் போலிருக்கு... போனால் இரண்டு பக்ஷணமாவது பொத்தலாமென்று டீஷேர்ட்டை எடுத்துப்போட்டுக்கொண்டு அவர்கள் வீட்டுக்கேற்றைத் திறந்து நடையில் அவசரங்காட்டாது, “எப்படிப் பாட்டி, விச்சு அண்ணா பயணங்கள் சௌகரியமாய் இருந்திச்சா... ரயிலெல்லாம் கரெக்ட் டைமுக்கு வந்திச்சா...” என்றபடி உள்ளே நுழைந்த ரகோத்தமனைப் பார்த்து, “அதெல்லாம் நல்ல சௌகர்யமா இருந்திச்சுப்பா... என்னாவே உன் பொண்ணு ஐஸ்வர்யாதான் தாத்தாவுக்கு மதியம் சமைச்சுப் போட்டாளாமே...” என்ற பாட்டியைப் புதிராகப் பார்த்துக்கொண்டு நின்றான் அவன்...!

“பொ. கருணாகரமூர்த்தி” <karunah08@yahoo.com>

# வியட்நாம் தமிழர்களின் பயணத் தடங்கள்

கௌரி பா

சைகோன் புதுச்சேரி - நாகரத்தினம் கிருஷ்ணா; பக். 382; விலை ரூ. 420; வெளியீடு: டிஸ்கவரி புக் பேலஸ், முனுசாமி சாலை, கேகே நகர் மேற்கு, சென்னை-78, மின்னஞ்சல்: discoverybookpalace@gmail.com; தொலைபேசி: +91 87545 07070

காட்சி ஊடகங்களின் வருகையினாலும் நவீன வாழ்க்கையில் மேலும் பல்வேறு பொழுதுபோக்கு அம்சங்கள் நிரம்பி வழிவதனாலும் பொழுதுபோக்கிற்காக வாசிப்பவர்கள் அருகி வருகிற காலம் இது. ஆனால், எப்போதும் போல், பணம் ஈட்டுவதை மையமாகக் கொண்டு செய்யப்படாத செயல்களில் ஒன்றாக இலக்கிய எழுத்து இன்னமும் நீடித்துக்கொண்டு இருக்கிறது.

ஒருவர் அவரது ஆத்ம திருப்திக்காக தன்னிச்சையாக முன்னெடுக்கும் எந்த ஒரு கலை முயற்சியும் எப்போதும் உயிரோட்டமானதாக இருக்கவே செய்யும். அப்படிப்பட்ட ஒரு முயற்சி நாகரத்தனம் கிருஷ்ணா எழுதிய 'சைகோன் புதுச்சேரி' என்ற சமூக வரலாற்று நாவல்.

இந்த நாவலின கதைக்களங்களாக இந்தியாவின் புதுச்சேரியும் வியட்நாமின் சைக்கோனும் அமைந்துள்ளது. இரண்டாம் உலகப் போரோடு பின்னிப்பிணைந்த உண்மை நிகழ்வுகளினதும், அந்த காலகட்டத்தில் புகழ்பெற்ற நிஜ கதாநாயகர்களின் கதைகளையும் புதுச்சேரி, சைகோன் நிலவியல் பின்னணியில் காலனியத்துவ அரசியல் நிகழ்வுகளையும் வைத்து எழுதிய சமூக நாவல்.

வாசகரை கதை சொல்லி இப்படி இழுத்தழைத்துச் செல்கிறார்:

> நம்முடைய தனித்தன்மையை விலக்கிக்கொண்டு எப்போது கொள்கை, சித்தாந்தத்திடம் முழுமையாக ஒப்படைத்துவிடுகிறோமோ அக்கணத்தில் குற்றம் தன்னை நியாயப்படுத்த முனைகிறது. அதுவே ஒரு நியாயமாக உருப்பெறுகிறது.



ஆல்பர் காம்யு (Albert Camus) வார்த்தைகள், சத்திய வாக்கு. காலனிய அரசியல்வாதிகளுக்கு, கடல் கடந்து முன்பின் அறிந்திராத மக்களை அடிமைப்படுத்த ஒரு சித்தாந்தம் தேவைப்பட்டதெனில், அவர்களிடமிருந்து விடுதலை பெற எண்ணிய மக்களுக்கும் சித்தாந்தமொன்றின் தேவை இருந்தது. இச்சித்தாந்தப் போரில் இரு தரப்பு ஆயுதங்களும் பலிகொண்ட உயிர்கள் ஏராளம்.

வரலாற்றின் ரத்தம் தோய்ந்த பக்கங்கள் எமது பூமியொன்றில் எழுதப்பட்டபோது, கையறு நிலையில் எங்களால் வேடிக்கை மட்டுமே பார்க்க முடிந்தது. முதல் இந்தோ - சீனா யுத்தத்தின் இறுதி அத்தியாயம் எழுதப்பட்ட எங்கள் சகோதர பூமிக்குப் பெயர்: தியன் பியன் ஃபூ (Dien Bien Phu). ஒன்பது ஆண்டுகாலப் போரை முடிவுக்குக் கொண்டுவந்த களம். நூறாண்டு காலம் ஆண்ட ஐரோப்பியர், காலனி மக்களின் விழிப்புணர்வை புரிந்து கொண்டிருக்க வேண்டும். அமைதியாக இந்தோ - சீனாவில் இருந்து வெளியேறி இருக்க வேண்டும். விடுதலையைச் சில நிபந்தனைகளுடன் வழங்க முன்வந்த காலனிய அரசின் யோசனையை 'வியட்மின்கள்' நிராகரிக்க, யுத்தம் ஆரம்பித்தது. போரின் முடிவு? நீங்கள் எதிர்பார்த்தது போலவே நீதியின் பக்கம்.

விளைவு நீதியின் பக்கமா இல்லை அமெரிக்க புவிசார் அரசியல் வியூகங்களில் விளைந்த தற்காலிகமான வியட்நாமின் வெற்றியா என்ற எண்ணம் வாசகராக எனக்கு தோன்றியது.

முன்னூறு பக்கம் தாண்டி ஓடும் இந்த நாவலின் மிக முக்கியமான கருவாக நான் கருதுவது, 'விடுதலை.'

'ஐரோப்பியர்கள், 'கூண்டில் அடைபடு!



வேண்டியது கிடைக்கும்' என்று கூற; வியட்மின்கள், 'விடுதலையைக் கொடு, வேண்டியதை நாங்கள் தேடிக்கொள்கிறோம்' எனத் தெரிவித்த பதிலால் நடந்த யுத்தம்' என்கிறார் எழுத்தாளர்.

ஓரே காலகட்டத்தில் புதுச்சேரி தமிழர்களை அடிமைப்படுத்தி வைத்திருக்கும் பிரான்சு, தென் சீனக்கடலில் உள்ள வியட்நாம் சைக்கோனையும் அடிமைப்படுத்துகிறது. அவர்களை எதிர்க்கிற வியட்நாமியர்கள் மேல் போர் தொடுக்கிறது பிரெஞ் ச் காலனி அரசு.

அந்த காலகட்டத்தில் வியட்நாமியர்களை வழிநடத்தும் தலைவராக கம்யூனிசக் கொள்கையுடைய தலைவர் ஹோசிமின், படைத் தளபதியாக ழியாப் (Giap) இருக்கிறார்கள். பிரெஞ்ச் படைத் தரப்பில் வேன்சான் ஓரியோல், ஹாரி நவ்வார் இருக்கிறார்கள். இது 1950களின் தொடக்கத்தில் நடக்கும் யுத்தம்.

1930களில் பிரான்சின் இன்னொரு காலனியான புதுச்சேரித் தமிழர்கள், புதுச்சேரியில் இருந்து வெறும் பாடசாலைப் படிப்போடு வியட்நாமின் சைக்கோனுக்கு செல்கின்றனர். அங்கு அவர்களுக்கு கடிகாரத்தை பார்த்து செய்யும் அரச அலுவலக உத்தியோகங்களான காவல்துறை, கடற்படை, நகராட்சி காவல்த்துறை, சுங்க இலாகா, நீதித்துறை, கல்வித்துறை, கப்பல்த்துறை மற்றும் ராணுவ உத்தியோகங்கள் வழங்கப்படுகின்றன.

இந்தோ - சீனாவிற்கு புறப்படுவதற்கு முன்பாக புதுச்சேரியில் சட்டபூர்வமான வயதடைந்த பிரெஞ்சிந்தியர்கள் அனைவரும், ஜாதி மதம் பாலின வேறுபாடுகள் குறுக்கீடின்றி பிறப்பால் அவரவர்கென்று நிர்ணயிக்கப்பட்ட சமூக அடையாளத்தை களையலாம் என்ற ஆணை அனுமதிக்கிறது. தந்தை பெயருக்கு பதிலாக ஐரோப்பியர் உச்சரிக்க வசதியாக ஒரு குடும்பப் பெயரைத் தெரிவுசெய்து கொள்ளவேண்டும். ஐரோப்பியருக்கு இணையாண சிவில் உரிமைகள் அவர்களுக்கும் கிடைக்கும் என்று உத்தரவாதம் அளித்தார்கள். அதனால் ஈர்க்கப்பட்டும் பிரான்சின் ரொனான்சன் என்றழைக்கப்படும் குடியுரிமை தரக்கூடிய சலுகைகளுக்காக ஆசைப்பட்டும் விவசாயக் குடும்பத்தைச் சேர்ந்த முப்பது வயது சுப்பராயன், அவர் அக்கா மகளாக இருந்து பின்னர் பதினாலு வயதிலேயே இந்திய கிராம கலாச்சார மரபினடிப்படையில் அவர் மனைவியாக பரிணாமம் பெற்ற வேதவல்லியை, அவள் வீட்டிற்கு சொல்லாமல் சைக்கோனுக்கு அழைத்து செல்கிறார்.

வேதவல்லியின் தம்பி சிங்காரம், "மாசிமக தீர்த்தவாரிக்கு போவது போல புறப்பட்டு வந்தோம். விழா முடிந்ததும் புறப்பட்டு விடுவோம்" என நினைத்தோம் என நாவலில் அவர் சைகோன் போன அனுபவத்தை சொல்கிறார். சிங்காரம் அடிப்படை மனித இயல்புகளை கட்டுப்படுத்தும் புதுச்சேரியில், தான் ஆசை ஆசையாய் காதலித்த ஒடுக்கப்பட்ட சாதிப் பெண்ணான ஜானகியை கைகழுவி விட்டு, சைக்கோனுக்கு கப்பல் ஏறியவர். அவர்கள் பிரியும் தருணம் நாவலில் இப்படியாக விரிகிறது.

> வழக்கமாக ஜானகியை அவளுடைய ஆடுகளுடன் சந்திக்க நேரும் அரசடிக்கு வந்திருந்தேன். காற்றில் அலைந்த கேசத்தை காது மடலின் பின்புறம் தள்ளியபடித் துறட்டுக் கோலால் அரசமரத்தின் தாழ்ந்த கிளையொன்றிலிருந்து தழை பறித்துக் கொண்டிருந்தாள். கீழே விழுந்த கணத்தில் தளிர் குழைகளாக தேர்வு செய்து கவ்வி, அசைபோட்ட வண்ணம் ஆடுகள் அவளைச் சுற்றி வந்தன. அக்கம் பக்கம் பார்த்து ஒருவருமில்லை என உறுதி செய்துகொண்ட பின், "ஜானகி" என அழைத்தேன். ஆடுகள் எனது குரலைக் கேட்டதும் தலையை உயர்த்தி, "ம். மே" என்று கத்திக்கொண்டு கலைந்தோடின. ஜானகியின் கவனம் முழுக்கத் துறட்டுக்கோலைக் கையாளுவதில் இருந்தது அல்லது அதுபோல பாவனை செய்தாள். ஏரியில் சரிவில் தடதடவென இறங்கித் துறட்டுக்கோல் பிடித்திருந்த கைகளை பற்றினேன்.
>
> "எங்க வந்தீங்க சொல்லுங்க?"
>
> "உன்னைப் பார்க்கணும் என்றுதான் வந்தேன்."
>
> "பார்க்கிறதுக்கு புதுசா எங்கிட்ட என்ன இருக்கு? சலிச்சுப்போச்சு, கிளம்பற. ஆரோக்கியம் சொன்னான், நீயும் சீமைக்கு

போறியாமே?"

"ஆமாம் சைக்கோனுக்கு போறேன். ரெண்டு மூணு வருஷத்திலே திரும்பிடுவேன்."

"திரும்பி?"

"உன்னைக் கூட்டிக்கிட்டு போயிடுவேன்."

"இதை நான் நம்பணுமாக்கும். குடுத்தனக்கார பொண்ணு எவளையாவது ஒங்க வூட்டுல பாத்து வெச்சிருப்பாங்க. அவளைக் கூட்டிக்கிட்டு போவ, இனி நான் எதுக்கு?"

வெடுக்கென்று வார்த்தைகள் தெறித்தன. கண்களில் நீர் கோர்த்திருந்தது. புறங்கையால் மூக்கை நான்கைந்து முறை அழுந்த துடைத்தாள். கைகளில் இருந்த துறட்டுக்கோலைத் தரையில் எறிந்துவிட்டு மரத்தடியை நெருங்கினாள். வலது முழங்கையைத் தலைக்குக் கொடுத்து, ஒரு காலை தரையிலும் மறு காலை முக்கோணமாக மரத்திலும் ஊன்றி நின்றாள். '...என்னை நம்பு நான் வந்திடுவேன்' எனச்சொல்ல நினைத்தேன். வார்த்தைகள் தொண்டையில் சிக்கிக் கொண்டிருக்க... மெல்ல என் தலையை அவள் முகத்தில் இறக்கியபோது கண்ணீர்ப் பைகளில் திரண்டிருந்த நீர் கன்னக் கதுப்பில் உடைந்து இறங்கியது. மறுகணம் என்னைத் தள்ளிவிட்டு விடுவிடுவென நடந்தாள்.

இப்படித்தான் ஜானகியை சிங்காரம் பிரிந்த காட்சி இந்த நாவலில் விரிகிறது. இந்தக் காட்சியை படித்த எவருக்கும் தொண்டையை துக்கம் அடைக்காமல் இருந்திருக்க முடியாது.

சைக்கோனில் வந்திறங்கிய இரண்டு வருடங்களில் கம்பீரமான ராணுவ சிப்பாயான சிங்காரத்தின் வாழ்க்கையில், திடீர் என்று ஆஜரான அனமிட் இன வியட்நாமியப் பெண்ணான மரியா ஹோவாம்மி, எந்தவிதமான இடைஞ்சல்களும் இல்லாமல், பிரத்தியேகமாக முன்கூட்டியே தனக்கென ஒதுக்கப்பட்ட விசேட வானூர்தி இருக்கை ஒன்றில் ஏறி அமர்வது போல, சிங்காரத்தின் மனைவி என்ற அந்தஸ்தை பெற்று இரட்டைக் குழந்தைகளான இசபெல், ஃபிலிப்பிற்கு தாயாவதும் நடந்தேறுகிறது. இந்தப் பக்கங்களில் நிறைவேறாத ஜானகியின் காதலுக்காக வாசகர் மனம் பரிதவிக்க தவறாது.

நாவலில் பல பக்கங்கள் சைக்கோனில் சிங்காரம் - மரியாவின் காதல் தோய்ந்த குடும்ப வாழ்வை சித்தரித்துக்கொண்டே முன்னேறும் அதே நேரம், சிங்காரத்தின் வாரிசான பொன்னுச்சாமியை தனியாளாக வளர்த்தெடுக்க புதுச்சேரியில் ஜானகி படும் பாடுகளையும் வாசகர் கண் முன்னே சமாந்தரமாக விரித்துச் செல்கிறது. புதுச்சேரியில் ஜானகி, திருமணமான ஆண்களின் காம இச்சைக்கு ஆள்படாமல் காத்துக்கொள்ள, தன் கறாரான பேச்சையும் இயல்பான எடுத்தெறியும் போக்கையும் ஆயுதமாகக் கொள்வதோடு, யார் தயவிலும் வாழாமல் வயல்களில் கூலி வேலை செய்தும் பிரான்ஸ் துரைமார்கள் வீடுகளில் வீட்டு வேலை செய்தும் பிழைப்பை ஓட்டுகிறாள்.

புதுச்சேரியில் இருக்கும் சாதிய அதிகாரத்திற்கு எதிராகவும் காலனியத் துரைகளின் ஆணாதிக்கத்திற்கு எதிராகவும் பல்வேறு தளங்களில் பல்வேறு அதிகாரத்தை எதிர்த்து போராடிக்கொண்டே தனது ஒற்றை இலட்சியமான தனக்கும் சிங்காரத்திற்கும் பிறந்த பொன்னுச்சாமியை சைக்கோனுக்கு அனுப்புவதற்காக உழைத்துக் கொண்டிருக்கிறாள்.

ஆம், வாழ்க்கையில் ஜானகியின் ஒரே லட்சியமாக இருப்பது, தனது மகன் பொன்னுச்சாமியை படிக்க வைத்து, தன்னை ஏமாற்றிவிட்டு சென்ற சிங்காரம் இருக்கும் இடமான சைக்கோனுக்கு அவனையும் ஒரு ராணுவ சிப்பாயாக அனுப்புவதாக இருக்கின்றது.

ஜானகி போன்ற ஒடுக்கப்பட்ட சாதிப் பெண்களுக்கு பிரெஞ்சு காலனியவாதிகளிடம் இருந்து விடுதலை தேவையற்ற ஒன்றாக இருந்தது. ஏனெனில் அவர்கள் ஆட்சியில்தான் ஜானகிக்கு மனித உரிமை, சமத்துவம் என்பது என்னவென்று ஓரளவாவது தெரியவந்தது. சாதிய ஒடுக்குமுறைகளால் சதா நசுக்கப்படும் கூட்டத்திற்கு காலனிய அரசுகளின் ஒடுக்குமுறைகள் ஒன்றுமே இல்லை என்பதை காந்தி புரிந்து கொண்டிருந்தார். தான் கனவு காணும் இந்திய விடுதலைக்காக அவர்கள் போராடப் போவதில்லை என்று அவர் நினைத்ததனாலோ என்னவோ அவர் 1934 மாசி மாதம் புதுச்சேரி சென்றபோது அவர் உரையில் இந்திய விடுதலை பற்றிப் பேசாமல் இப்படிப் பேசினார் என்று நூலில் வருகிறது.

> சமத்துவம், சகோதரத்துவம் ஆகிய சொற்களின் பொருளை இந்தியாவின் பிறபகுதி மக்களைக் காட்டிலும் புதுச்சேரிவாசிகள் நன்கறிந்தவர்கள். எனவே ஜாதி, வகுப்பு வாதத்திற்கு எதிராக புதுச்சேரி அன்பர்களே போராடக்கூடியவர்கள் என்கிற நம்பிக்கை எனக்கு இருக்கிறது.

சாதி, வகுப்புவாதங்களினால் பிளவுபட்ட இந்திய மக்களை முதலில் ஒருங்கிணைக்காமல் இந்திய சுதந்திரத்திற்காக ஒன்று திரட்ட முடியாது என்பதை அவர் புரிந்து வைத்திருந்தார் என்பதை இந்த நாவலில் வரும் சம்பவங்கள் சொல்லாமல் சொல்லிச் செல்கிறது.

நாவலில் வரும் அடுத்த முக்கிய கதாபாத்திரம் சுப்புராயனின் மனைவி வேதவல்லி. விவசாயக் குடும்பத்தில் இருந்து வந்த, அதிகம் படிக்காத ஒரு பெண். சைக்கோனில் இருக்கும் இயற்கை வனப்புமிக்க நதிகளையும் குன்றுகளையும் ஏரிகளையும் கடலையும் ரசிக்கத் தெரியாமல் புதுச்சேரி மண்ணை நினைத்து நித்தம் ஏங்குகிறார்.

தான் விட்டுவிட்டு வந்த உறவுகள் நினைப்பாகவே வாழ்க்கையை வெறுத்து ஒதுக்கி வைத்திருந்த வேதவல்லிக்கு சைக்கோனில் உள்ள தமிழ்ச் சங்கத்தின் மூலமாக இஸ்மாயில் அண்ணர், அவர் மனைவி அமீனா பேகம், லெயோன் புருஷாந்தி என்ற செல்வந்தரின் நட்பு கிடைக்கிறது. புதிதாக கிடைத்த உறவுகளினால் வேதவல்லி சொந்த மண்ணிற்காக ஏங்கும் ஏக்கம் கொஞ்சம் கொஞ்சமாக குறைகிறது, புது நட்புக்கள் தந்த ஊக்கத்தினால் வேதவல்லி அங்கு பிறந்த குழந்தைகளுக்கு தமிழ் ஆசிரியை ஆகிறார். தமிழ் சங்கத்தின் நிர்வாக பொறுப்பையும் ஏற்கிறார். இதனால் பிள்ளை இல்லாத வேதவல்லிக்கு வாழ்வை வாழ்வதற்கான ஒரு குறிக்கோள் கிடைக்கின்றது.

காந்திய சிந்தனைகளினாலும் பெரியார் சிந்தனைகளினாலும் ஈர்க்கப்பட்டு, சமூகத்திற்கு முன் உதாரணமாக விளங்கி, காலத்தை மீறிய முற்போக்கு கருத்துக்களை சமூகத்திற்கு சொல்லும் கம்பீரமான தோற்றம்கொண்ட லெயோன் புருஷாந்தி மீது வேதவல்லிக்கு ஈர்ப்பு ஏற்படுகிறது. அவர் முன் நின்று நடத்தும் எல்லாக் காரியங்களிலும் கைகொடுக்கும் ஆளாக வேதவல்லி வளர்கிறார். தமிழ் ஆணுக்கும் வியட்நாமியப் பெண்ணிற்கும் பிறந்த ஒரு அநாதைப் பெண் குழந்தைக்கு வளர்ப்பு தாயாகிறார். இதுவும் லெயோன் புருஷாந்தியின் உந்துதலில்தான் நடக்கிறது.

சுப்புராயன் பற்றிய கதை சொல்லியின் குறிப்புகள் அனைத்தும், அவரைத் தன்னைப் பற்றி தாழ்வு மனப்பான்மையை கொண்டிருக்கும் ஒருவராகவே சித்தரிக்கிறது. தாழ்வு மனப்பான்மை இல்லாதவர்கள், சாதாரணமாக பொது வெளியில் அவர்கள் மேல் விழும் அலட்சியப் பார்வைகளையோ நக்கல் தொனிகளையோ சிரத்தை செய்யமாட்டார்கள். சுப்பராயனுக்கு, காவல்துறையில் அவர் செய்யும் பணி, அவ்வப்போது தன் அதிகாரத்தினால் மற்றவர்களை அடித்து துன்புறுத்தும் போது, அவரது போதாமைகளை தற்காலிகமாக விலக்கி வைக்க உதவுகிறது.

பொதுவாக மனைவிகளை அடிக்கும் ஆண்கள் கூட, இப்படியான உளவியல் தாழ்வுச் சிக்கல்களினால் பாதிக்கப்பட்ட ஆண்களாக இருப்பதும் ஒரு காரணம். அடிக்கிற கை தான் அணைக்கும் என்ற பழமொழிக்கு ஏற்ப வேதவல்லியை சுப்புராயன் அடிக்கடி அடிப்பதும் பின்னர் அதற்கு ஒத்தடம் குடுக்கும் விதமாக நடந்துகொள்வதுமாக காலத்தை ஓட்டுகிறார். குடும்ப வன்முறையில் ஈடுபடும் குணாதிசயங்களுடன் சுப்புராயன் நாவல் முழுவதும் வலம் வருகிறார். தத்ரூபமாக நாவலாசிரியர் இந்த கதாபாத்திரத்தை படைத்துள்ளார் எனலாம்.

வேதவல்லி - சுப்பராயனின் வளர்ப்பு மகளான லட்சுமியும் சிங்காரத்தின் பிள்ளைகளான பிலிப், இசபெல் ஆகியோரும் ஒருவருக்கொருவர் அணைதுணையாக எப்போதும் ஒன்றாக வளர்கின்றனர்.

சிங்காரம், சுப்புராயன், வேதவல்லி, லெயோன் புருஷாந்தி ஆகியவர்கள் பிரெஞ்சு குடியுரிமை பெற்றவர்கள். பிரெஞ்சு குடியுரிமை பெற்றவர்கள் தங்களை பிரெஞ்சிந்தியர்கள் என்று அடையாளப் படுத்திக்கொள்கிறார்கள். பிரஜாவுரிமையும் அரச உத்தியோகமும் வழங்கிய பிரெஞ்சு நாட்டுக்கு தாங்கள் எப்போதும் விசுவாசமாக இருக்க வேண்டும் என்று நினைப்பவர்கள். ஆனால், லெயோன் புருஷாந்தி அந்த சிந்தனைக்கு விதிவிலக்கானவர்.

லெயோன் புருஷாந்தி, பிரிட்டிஷ்காரர்களிடம் இருந்து இந்தியா விடுதலை அடைய வேண்டும் என்ற ஆர்வத்தில் இருப்பவர். அதேநேரம், அவர் ஒரு காந்தியவாதி என்றபோதிலும் ஐரோப்பியர்கள் போல தமிழர்கள் கம்பீரமாக உடை அணிய வேண்டும் என்று அனைவருக்கும் போதிக்கிறார். அவர் நாலு பிள்ளைகளுக்குத் தாயான கோடீஸ்வரியான விதவைப் பெண்ணுக்கு மறுவாழ்வு அளித்து சீர்திருத்தவாதி என்ற நற்பெயரையும் சமூகத்தில் பெறுகிறார்.

சைக்கோனில் அரச உத்தியோகங்களில் இருக்கும் பிரெஞ்சிந்தியர்கள், வணிகம் செய்யும் பிரிட்டிஷ் இந்தியர்கள் சமூகங்களின் மத்தியில் செல்வாக்கு பெற்ற ஒரு நபர், லெயோன் புருஷாந்தி. காந்தியின் செய்கைகளை நகல் எடுத்தாற்போல இவரின் செய்கைகளும் இருக்கிறது, காலனியர்களின் அரசிடம் கைகட்டி வேலை பார்க்கும் உத்தியோகமான தனது வங்கி வேலையை கைவிடுகிறார். இப்படி தனது ஒவ்வொரு செயல்கள் மூலமும் காந்தியின் கால்தடங்களின் வழி நடக்கிறார். அவர் செயல்பாடுகள் ஒவ்வொன்றையும் பார்த்து வேதவல்லி பிரமிக்கும் அதே தருணம் லேயோன் புருஷாந்தியின் தியாகங்களை எள்ளி சுப்புராயன் நகையாடுவார். "கோடீஸ்வர விதவைகள் என்றால் ஒன்றென்ன ஒன்பது பேரைக்கூட மறுமணம் செய்யலாம்" என்று கூறுவார்.

பொதுவாக மனிதர்களின் செயல்பாடுகளையும் அவர்கள் நகர்வுகளையும் தேவைக் கோட்பாட்டு அடிப்படையிலேயே கணிப்பது இலகுவாக இருக்கிறது. முதலாவது அடிப்படைத் தேவையான உடல் சார்ந்த நிறைவு

என்று பொருள் கொள்ளலாம். அவை சுவாசிக்கும் காற்று, நீர், உணவு, போதுமான நித்திரை, உடலுறவு என்பவற்றை உள்ளடக்கும். இது உடல் சம்பந்தப்பட்ட திருப்தியை உள்ளடக்கும். சுவர் இருந்தால்தான் சித்திரம் வரையலாம் என்ற கூற்றுக்கிணங்க இந்த விளக்கம் அமைந்திருக்கிறது.

இரண்டாவதாக பாதுகாப்பு... அதாவது பொருளாதார, சமூக, தொழில்களினால் ஒரு தனிநபர் அடையும் நிறைவு. இந்த தேவைகள் உடல் சம்பந்தப்பட்ட அடிப்படைத் தேவைக்கு ஒரு படி மேலாக நிற்கிறது.

மூன்றாவதாக மனிதன் ஒரு சமூக விலங்கு என்பதனால் குடும்பத்தில் அங்கத்துவம் வகிக்கும் தேவை, சமூகத்திற்குள் ஒருத்தி / ஒருவனாக அங்கத்துவம் வகிக்கும் தேவை, பரந்த நட்பு வட்டம், மனதிற்கினிய துணை ஆகியவை ஒரு நபர் தன் வாழ்வில் சந்திக்கக்கூடிய துயரச் சம்பவங்களில் இருந்து தன்னை விடுவித்துக்கொள்ளவும் கொண்டாடப்பட வேண்டியவற்றை சேர்ந்து கொண்டாடுவதற்கும் உறுதுணையாக இருக்கின்றது. பல ஆய்வுகள் மூலம் பரந்துபட்ட சமூகத்தொடர்புகளும் நட்புவட்டங்களும் ஒரு நபருக்கு மனவுளைச்சல், தனிமையால் விளையக்கூடிய மனச்சோர்விலிருந்து விடுவிக்கவல்லவை என்று நிரூபிக்கின்றன.




இந்த நாவலில் மேற்குறிப்பிட்ட உளவியல் தேவைகள், நட்பு, மனதிற்கினிய துணை ஆகியவற்றிற்கான வெற்றிடத்தை நிரப்ப அலையும் ஒரு மனமாக வேதவல்லியின் மனம் உளலும் வேளையில்தான் அவளுக்கு லேயோன் புருஷாந்தி மூலமும் தமிழ்ச் சங்கம் மூலமும் அவையெல்லாம் கிடைக்கிறது. அந்த நட்பை ஸ்திரமாக வைத்திருக்கும் முனைப்பில் லேயொன் புருஷாந்தி முன்னெடுக்கும் எல்லா விடயங்களுக்கும் வேதவல்லி தன்னாலான ஆதரவை வழங்கி வருகிறார்.

அடுத்ததாக ஒரு தனிநபர், தான் தன் குடும்ப / சமூக சூழலில் மதிப்பு மரியாதை அந்தஸ்து என தனித் தன்மையுடன் கூடிய அர்த்தமுள்ள வாழ்வை வாழ வேண்டும் என்று நினைத்து அதில் முன்னேற்றமும் நிறைவும் காண்பது. அந்த வகையில் தன்மதிப்பை தான் வாழும் சூழலில் தக்கவைக்க காவல்துறை வழங்கும் அதிகாரம் தாழ்வுச் சிக்கலில் உழலும் சுப்புராயனுக்கு தோதானா ஒன்றாக இருக்கிறது.

பொதுவாக மனிதர்களுக்கு அவர்கள் சுய வாழ்வியல் தேவைகள் பூர்த்தியான பின், அவர்கள் தாம் வாழும் சமூகத்திற்காக செய்ய வேண்டிய பொறுப்பை உணர்ந்து, சமூகத்தின் வளர்ச்சிக்கு தங்களினால் இயன்ற பங்களிப்பை செய்வதன் மூலம், தங்கள் சந்தோசத்தை மேலும் மெருகேற்றி பூர்த்தி செய்ய முனைவார்கள். அந்த வகையில் இந்த நாவலில் வரும் லேயோன் புருஷாந்தி, மனிதர்கள் உயிர்வாழத் தேவையான அத்தியாவசியத் தேவைகளுக்காகவோ தனது பாதுகாப்பு கருதியோ எந்தவிதமான முயற்சிகளையும் எடுக்கவோ அதனைத் தக்கவைக்கவோ வேண்டிய தேவைகள் அற்றவர். அதனால், அவரின் செயல்பாடுகள், அவரை சுற்றி இருக்கின்ற சமூகத்தினது மேம்பாடுகளுக்கு பங்களிப்பு செய்ய அவரை இயல்பாக உந்தித் தள்ளுகிறது.

அவர் பொதுக்கூட்டங்களில் பெண்களின் பிரதி நிதித்துவத்தின் இன்றியமையாமை பற்றிப் பேசுகிறார். பிரித்தானிய ஆட்சியில் இருந்து இந்திய தேசம் விடுதலை பெற வேண்டும் என்று அந்த விடுதலை நோக்கி போராடும் நேதாஜி சுபாஸ் சந்திரபோஸின் கட்சிக்கு உதவிகள் செய்கிறார். எல்லாவிதமான சமூக சேவைகளிலும் ஈடுபடுகிறார்.

இரண்டாம் உலகப் போரில் நாஜி ஜேர்மனியோடு ஜப்பான் கூட்டு சேர்ந்து, அதன் அதிகாரத்தின் பிடியின் கீழ் பிரெஞ்சு நாட்டு மக்களையும் கூடவே அதன் காலனிகளையும் கொண்டு வருகையில், தற்காலிகமாக பிரித்தானியாவின் எதிரியாக ஜப்பான் மாறுகிறது. இந்த சின்ன இடைவெளிக்குள் புகுந்து ஜப்பான் ஆதிக்கத்தில் இருந்த இந்தோ - சீனா பிரெஞ்சு காலனிகளில் உள்ள இந்தியர்களின் ஆதரவையும் பணபலத்தையும் திரட்ட அன்றைய சக்தி வாய்ந்த அரசியலாளரான நேதாஜி சுபாஸ் சந்திரபோஸ் சைகோன் வருகிறார். அந்த வேளையில் சைகோன் சமூகத்தில் பணபலமும் அந்தஸ்த்தும் புகழுடனும் வாழும் காந்தியவாதியான லேயோன் புருஷாந்தியின் ஆதரவை நாடுகிறார்கள். புவிசார் அரசியலின் நிலை எப்படியும் மாறலாம்; தாங்கள் தங்கள் காலனிய நாடான பிரெஞ்சு அரசுக்கு விசுவாசமாக இருக்க வேண்டும் என்றும், தங்களதும் தங்களின் குடும்பத்தினதும் பாதுகாப்பு மட்டுமே முக்கியம் என பிரெஞ்சு இந்தியர்கள் அனைவரும் ஒதுங்க லேயோன் புருஷாந்தி, வேதவல்லி ஆகியோர் நேதாஜியை வரவேற்று அவரின் இந்திய விடுதலைக்கான பணிகளை இந்தோ - சீனாவில் தொடங்கி வைக்கின்றனர்.

ஜாப்பானின் கொட்டத்தை அமெரிக்கா அடக்க மீண்டும் பிரெஞ்சு அரசு அதிகாரத்திற்கு வருகிறது. அப்போது ஜப்பானுடைய ஆதரவில் பிரெஞ்சு காலனியான சைக்கோனில் அரசியல் செய்த குற்றச்சாட்டில், சிறையில் அடைக்கப்பட்டு, சித்தவதைக்குள்ளாகி, பைத்தியமாக வெளியில் வந்து, பின்னர் இந்தியா வந்து புதுச்சேரி வீதிகளில் லேயோன் புருஷாந்தி பைத்தியமாக அலைந்ததற்கு பல நிஜ சான்றுகள் உள்ளதாக தெரிகிறது என்று கதையில் கூறப்படுகிறது.

அரசு என்பது மக்களை ஒடுக்கும் இயந்திரம். உலகெங்கும் காலனிகளை வைத்திருந்த பிரான்ஸ் அரசு, அதன் ஒரு காலனியில் இருந்து இன்னொரு காலனிக்கு அரச உத்தியோகங்களுக்காக மக்களை இடப்பெயர்வு செய்து, அதில் எதிர்க்கும் மக்கள் கூட்டத்தினை அவர்களின் இன்னொரு அடிமைகளைக்கொண்டு அடிமைப்படுத்த முனைந்தது என்பது இந்தக்கதை மூலம் தெட்டத்தெளிவாக தெரிகிறது. பிரெஞ்சு அரசு, தங்களால் ஒடுக்கப்படும் இந்திய புதுச்சேரி மக்களின் கைகளை கொண்டு, இன்னொரு ஒடுக்கப்படும் பிரஜைகளான வியட்நாமியர்கள் கண்களை குத்த வைக்கிறது. இரண்டு அடிமைப்படுத்தப்படும் இனங்களிடம் பகையை வளர்த்து, சாதுர்யமாக தங்கள் காலனித்துவத்திற்கு எதிரான கோவம் எப்போதும் பிரெஞ்சு அரசின் மேல் திரும்பாமல் பார்த்துக்கொள்ள முனைந்திருக்கிறது.

தங்களின் பொது எதிரி பிரெஞ்சு அரசு என்று அவர்களுக்கு தெரிய வரக்கூடாது என்ற எச்சரிக்கையோடு நடந்துகொண்டுள்ளது. ஆனாலும் வியட்நாமியர்கள் எய்தவர் இருக்க அம்பை நோகவில்லை. சிங்காரம், வேதவல்லி, சுப்பு போன்ற புதுச்சேரி தமிழர்கள், வியட்நாம் சென்று குடியேறி சுமார் இருபது ஆண்டுகளின் பின்னரே வியட்நாம் போர் தொடங்குகிறது. இந்த காலகட்டத்தில் வியட்நாம் தாய்க்கும் தமிழ் தகப்பனுக்கும் பிறந்த வேதவல்லி வளர்ப்பு மகள் லக்ஷ்மியும் சிங்காரத்தின் மகன் ஃபிலிப்பும் இராணுவத்தில் பிரெஞ்சுப் படையில் சேர்ந்துவிடுகிறார்கள். அத்தோடு ஜானகியின் மகன் பொன்னுச்சாமியும் புதுச்சேரியில் இருந்து வந்து சைக்கோனில் பிரெஞ்சு இராணுவத்தில் சேருகிறான்.

ஃபிலிப், பிரெஞ்சு குடியுரிமை பெற்ற சிங்காரத்தின் மகனாகவும் வியட்நாமிய பெண்ணான மரியா ஹோவாம்மியின் மகனாகவும் இருந்து தன் தாய் நாட்டின் பாதுகாப்பை உறுதிப்படுத்துவதுடன் ஜானகியின் மகன் பொன்னுச்சாமியையும் ஒருங்கே காப்பாற்றுகிறார். பிரெஞ்சு காலனியத்துவ அரசு எவ்வளவுதான் காலனிய நாடுகளின் குடிமக்களை ஒருத்தர் மீது இன்னொருவரை ஏவி தங்கள் பக்க போரினை வெல்ல முயன்ற போதிலும் தேசப்பற்றுள்ள மனிதர்களையும் மனித நேயத்திற்கு விசுவாசமான மனிதர்களையும் அவர்களினால் வெல்ல முடியவில்லை.

தனது தாய் நாட்டின் மேல் அந்நியரகள் போர் தொடுக்க வந்த போது ஃபிலிப் பிரெஞ்சு ராணுவத்தில் உளவாளியாக சேர்ந்து தனது வேலையை கச்சிதமாக முடித்து விடுவதோடு, வியட்நாமிய ராணுவத்தினால் போரில் தோற்ற பிரெஞ்சு படையில் இருந்த பொன்னுச்சாமி கைதாகி திக்கற்று நின்ற போது தனது சகோதரன் பொன்னுச்சாமியை காப்பாற்றும் காட்சி நாவலின் இப்படி விரிகிறது.

போர்க் கைதிகள் முகாமில் அடைபட்டு பத்து நாட்கள் கடந்திருந்தபோது திடீரென்று அம்மா நினைப்பும் ஊர் நினைப்பும் வர முதன்முறையாக அழுதான். ஒன்பது ஆண்டுகளாக சைக்கோனில் இருக்கிறான், யுத்தம் செய்கிறான், யாருக்காக இந்த யுத்தம்? வியட்மின்கள் அவனுக்குச் செய்த துரோகம் என்ன? அல்லது அவர்களுக்குபொன்னுச்சாமி தான் ஏதாவது துரோகம் செய்திருப்பானா? இதென்ன விளையாட்டு? எங்கோ பிறந்து எங்கோ வளர்ந்து, ஆசை ஆசையாய் அம்மா ஊர்ச்சாமிகளுக்கு படையலிட்டு கப்பலேற்றி விட்டது இப்படிச் சிறையில் வாடவா? தம்முடைய படை வீரர்கள் சிறைபட்டிருப்பது குறித்த அக்கறை பிரான்சுக்கு உண்டா? என்றெல்லாம் நினைத்துக் கலங்கினான்.

பிரெஞ்சு காலனியப் படை வியட்மின்களிடம் தோற்றுள்ள நிலையில், வியட்நாமில் இன்றைய தேதியில் அவர்கள் முகவரி என்ன? அதிகாரம் என்ன? எனக்குழம்பிக்கொண்டு வெளியில் வந்த வேளை, வாயிலில் ஃபிலிப்.

“உன்னை எப்போது விடுதலை செஞ்சாங்க?” ஆர்வத்துடன் பொன்னுச்சாமி நண்பனைக் கேட்டான்.

“என்னை யார் விடுதலை செய்யவேண்டும். நான் உண்மையில் வியட்மின்களின் உளவாளி. பிரெஞ்சு காலனியப் படையில் சேர்ந்து எங்கள் வியட்மின்கள் படைத்தலைமைக்கு நம்முடைய அசைவுகளை கொண்டு சேர்ப்பதுதான் என் வேலை.”

முடிவில் போரின் முடிவு நீதியின் பக்கம் இருந்தது போல தோற்றப்பாடு அளித்தாலும், அமெரிக்கா, ஜேர்மனியுடன் கூட்டு சேர்ந்த ஜப்பானை எதிர்த்து தனது அதிகாரத்தை அந்தப் பிராந்தியத்தில் நிலைநாட்ட நினைத்து உதவி, பின்னர் அந்தப் பிராந்தியத்தில் சீனாவின் கம்யூனிசக் கொள்கை பரவிவிடாமல் இருக்க வியட்நாமியர்களுக்கு எதிராக இருபது வருடம் கடும் போரை மேற்கொண்டது. இந்தப் போர்களில் பங்கெடுத்த மனிதர்களும் அவர்களுக்கு பிறந்த அடுத்த தலைமுறையும் இன்னமும் போரினால் ஏற்பட்ட உளவியல் தாக்கத்தால் பாதிக்கப்பட்ட வண்ணம் உள்ளனர் என்பதுதான் கொடுமையான யதார்த்தமாக இருக்கிறது.

பிரெஞ்சு காலனிய காலத்தில் வியட்நாமில் வாழ்ந்த தமிழர்களின் பயணத் தடங்களையும் வாழ்வையும் சித்தரிக்கும் இந்நாவல், என் தேடல்களுக்கு தீனி போட்டதுடன் லண்டனில் நான்றிந்த வியட்நாமிய மனிதர்களுடன் எனக்கு இனம் தெரியாத ஈர்ப்பையும் நெருக்கத்தையும் வரப்பண்ணியிருக்கிறது.

பா கௌரி <p.gowry@btinternet.com>

# மௌன மொழிகள்

விமலா ரமணி
ஓவியம்: பிரகாஷ் தேஷ்முக்

காலைப்பொழுது இனிமையானது. அழகழகான காட்சிகள்...

மலரிடம் குசலம் விசாரிக்கும் வண்டுகள். தலைவணங்கி கதிரவனை வரவேற்கும் கமலங்கள். பூமியின் சிரிப்பு. ஸ்பரிச சுகம் தரும் தென்றலின் வருடல். மழை நாட்களில் மழையின் மிச்ச அறி விப்பாக தோன்றும் மின்னலின் நெளிந்து நெளிந்து தெரியும் வெளிச்சங்கள்.

எல்லாமே அழகுதான். மலர்மதி ஜன்னல் கதவை திறந்து இயற்கையை ரசிக்க ஆரம்பித்தாள்.

அப்போதுதான் கண்ணில் பட்டது. எதிர்வீட்டில் ஜன்னல் கதவுகள் திறந்து கிடந்தன. பூட்டி இருந்த வீட்டுக்கு யாரோ குடிவந்து விட்டார்கள் போல. அந்த ஜன்னல் வழியாக பார்த்தபோது, ஒரு வாலிபன் கண்ணாடி முன் தலைசீவிக் கொண்டிருந்தான். கண்ணாடியை மாட்டுவதும் கழற்றுவதும் காலண்டரை மாட்டுவதுமாக அவன் திணறிக் கொண்ட்டிருந்தான். யார் இவன்?

எதேச்சையாக சட்டென்று அவனும் இவளை பார்த்தவன் ஒரு கணம் அசட்டு சிரிப்பு சிரித்தான். இவளும் அதைத் தொடர்ந்தாள். இந்த நாடகம் இரண்டு நாள் அரங்கேறியது.

பழக்க தோஷத்தில் இவள் அவனைப் பார்த்து சிரிக்க, திடுக்கிட்டு போனவன் எப்படியோ பதில் சிரிப்பை உதிர்த்து, பிறகு மெல்ல கை ஜாடையில் உன் பெயர் என்ன என்று கேட்டான்.

இவள் அருகில் இருந்த பிளவர் வாசியிலிருந்து ஒரு ரோஜா பூவை எடுத்துக் காட்டினாள். 'உன் பெயர் ரோஜாவா' என்றான் சைகையில்.

பலமாக மறுத்தவள் கையை குவித்து மலர் போல செய்கை காட்டி வானத்து நிலவை காட்டினாள். முழு நிலவு அடையாளம் காட்டினாள்.



'மலர் மதியா' என்றான். இவள் ஆமாம் என்று கைதட்டினாள்.

பதிலுக்கு செய்கையில் 'உன் பெயர் என்ன' என்று கேட்டாள்.

அவன் அனந்த சயன போஸ் காட்டினான். அப்போது அவன் சிரித்தது அழகாகவே இருந்தது. 'ரங்கநாதனா' என்றாள். 'நீ ஒரு புத்திசாலி' என்று செய்கை காட்டி அதிலே பாதி என்று குறிப்பால் உணர்த்தினான். 'நாதனா ரங்கனா?' இவள் சிரித்தபடி அடையாளம் கேட்க, அவனும் பதிலுக்கு சிரித்தான். ரங்கநாதனாகத்தான் இருக்கும். நாதன் என்று யார் பெயர் வைத்துக்கொள்வார்கள்?

'பாடத் தெரியுமா?' என்று ஒரு முறை ஜாடையில் கேட்டான். இவள் பாரதியின் குயில் பாட்டு புத்தகத்தை காட்டினாள். தன் குரல் இனிமையானது என்று ஜாடையிலே சொன்னாள். அவன் 'தம்ஸ்சப்' செய்கை காட்டினான். 'உனக்கு பாட தெரியுமா?' என்று எதிர் கேள்வி கேட்டபோது பாரதியின் 'கண்ணம்மா என் காதலி' என்ற புத்தக வரிகளைக் காட்டினான். அவள் வெட்கினாள். மனசுக்குள் பட்டாம்பூச்சிகள் பறந்தன. எங்கோ குருவிகள் சிறகடித்தன.

'எந்தன் வாயிலே அமுதூறுதே' என்ற வரிகளை ஜாடை காட்டி அபிநயித்தான். இவள் சிரித்தபடி கீழே ஓடிவிட்டாள். அப்பா அழைத்தார்.

'என்ன வேலை செய்கிறாய்?' என்றாள் ஒரு நாள்.

ஒரு புத்தகத்தை காட்டினான். எழுத்தாளரா என்றால் இல்லை என்று மீசை முறுக்கி பாரதியை அடையாளம் காட்டினான்.

'ஓ கவிஞனா' என்ற போது ஆமோதித்தான்.

'காதலித்தால் கவிதை வருமா' என்று ஜாடை கட்டிய போது 'கழுதை வராமல் இருந்தால் சரி' என்று எதிர்சாடை காட்டினான்.

ஊரிலிருந்து தன் தாய் வரப்போவதாகச் சொன்னான். நமஸ்காரம் செய்தாள். சிரித்தான்.

அன்று இவள் வீடு தேடி அவன் தாய் வந்தாள். இவளை பாசத்துடன் பார்த்தபடி, "இங்கே பாலு தயிறு எல்லாம் வீட்டுல கொண்டு வந்து கொடுப்பாங்களா? புது இடமா ஒண்ணுமே புரியல" என்றாள்.



அதற்குள் அங்கு வந்த இவள் தந்தை சொன்னார்: "நான் ஏற்பாடு பண்றேன் அம்மா. பால் பூத்திருக்கு. சைக்கிள் பால் இருக்கு. அந்தக் காலம் மாதிரி வாசல்ல மாட்ட கட்டிட்டு கோனார் பால் கறக்குற வழக்கமே மாறிப்போச்சு." இருவருமே சிரித்தார்கள்.

அந்த அம்மாள் அடிக்கடி வர ஆரம்பித்தாள். இவளுக்கு ஜன்னல் பக்கமே போக மறந்து போயிற்று. ஒரு வேளை அவன் முகத்திற்கு பதிலாக அவன் அம்மா முகம் தெரிந்தால் என்ன செய்வது என்று பயம்.

அன்று அந்த அம்மாள் கையில் ஒரு பத்திரிகையுடன் வந்தாள்.

"இது என் பையனோட கல்யாணம். சென்னையில் கல்யாணம். அடுத்த வாரம் முகூர்த்தம். அதான் இவனை கூட்டிட்டு போக வந்தேன்" என்றாள்.

ரங்கனுக்கு திருமணமா? எத்தனை ஜாடை காட்டினான்? ஜோடியாக போகிறான் என்பதைச் சொல்லவே இல்லையே.

யுகம் யுகமாக காதலை பின் தொடரும் பயண திட்டத்தின் மாறாத நிகழ்ச்சி நிரல் இது

நிரந்தரமாக ஜன்னல் கதவை இனி மூடிவிட வேண்டியதுதான்.

அந்த அம்மாள் வைத்த கல்யாணம் அழைப்பிதழ் மின்விசிறியின் காற்றுக்கு படபடத்தது.

அந்த அம்மாள் தொடர்ந்தாள். "இவனுக்கும் ஒரு நல்ல இடமா கிடைச்சதுன்னா ரெண்டு



கல்யாணத்தையும் ஒரே பந்தல்ல முடிச்சுடலாம்."

"இன்னொரு பையன் இருக்கானாம்மா?" அப்பா கேட்டார்.

"ஆமாங்க சின்னப் பையன். துபாய்ல வேலை. நல்லா சம்பாதிக்கிறான். காதல் கல்யாணம்தான். அண்ணனுக்கு கல்யாணம் ஆகாம தான் பண்ணிக்க மாட்டேன்னு சொல்லிட்டு இருந்தான். இப்போ வேற வழி இல்ல. இவனுக்கும் கல்யாணம் ஆகற மாதிரி தெரியல. அதனாலதான் இப்ப கல்யாணம் பண்ணிக்க சம்மதிச்சு இருக்கான்."

"அப்போ இங்கே இருக்கிறது?"

"என்னோட மூத்த பையன்."

"ஏன் கல்யாணம் ஆகல?"

"என்னத்த சொல்றது? அவன் ஒரு மாற்றுத் திறனாளி. காது கேட்காது. வாய் பேசாது. எங்களுக்கே ரொம்ப நாளைக்கு அப்புறமாதான் தெரிஞ்சது. எத்தனையோ வைத்தியம் பார்த்தோம். ஒண்ணும் சரியாகல. அவன் தனக்கு கல்யாணமே வேண்டாம்னு சொல்கிறான். அவன புரிஞ்சுக்கற ஒரு பொண்ணு கிடைக்கணும். அவன் பாஷையை தெரிஞ்சுக்க ஒரு நல்ல மனசு உள்ள பொண்ணு தேவை."

இவள் திகைத்தாள்.

வாய்பேச முடியாது,காது கேட்காது;கிட்டத்தட்ட ஒரு மாதமாக இந்த குறைகள் ஏதும் தெரியாமல் இவர்கள் ஒருவரை ஒருவர் புரிந்து பேசிக்கொண்டு இருந்திருக்கிறார்கள்.

காதலுக்கு மொழி தடை இல்லை, காதலுக்கு செவித்திறன் தேவையில்லை; காதலுக்கு வற்றாத அன்பும் புரிந்துகொள்ளும் மனமும்தான் தேவை.

இரவு நட்சத்திரங்களுடன் பேசும் உயர்ந்த மரங்கள் எந்த மொழியில் பேசுகின்றன?

செடிகளை ஸ்பரிசிக்கும் தென்றல் காற்று தன் காதலை எந்த மொழியில் சொல்கிறது?

காலம் காலமாக பறவைகளும் மிருக இனங்களும் எந்த மொழியிலே காதலிக்கின்றன? மொழி என்பது நாகரீகத்தின் வளர்ச்சி.

ஆதாம் ஏவாள் காலத்தில் மொழி இல்லை, காதல் இருந்திருக்கிறது.

இவளுக்கு இப்பொழுதுதான் மௌன மொழி புரிந்தது. காதல் வானில், மேகப் படகுகளில், மின்னல் துடுப்புக்கள் துணையாக பவனி வரும் நேரம் காதலுக்கு மொழி தேவை இல்லை. கற்பனை வளம் இருந்தால் மட்டும் போதும். பல மொழி சொல்லும் கவிதை அது.

'காதல் கடிதம் தீட்டவே மேகத்தை காகிதமாக்க நினைத்த கவிஞன் இவன். பேனாவின் மை தீர்ந்துபோனால் வானின் நீலத்தை தன் பேனாவின் மையாக்க நினைத்த பேராசை மிக்க ஒப்பற்ற கவிஞன் இவன்.' (வைரமுத்துவின கவிதை வரிகள் மனத்துள் தோன்ற)... இவள் மாடிக்கு ஓடி சார்த்தி இருந்த ஜன்னல் கதவை திறந்தாள். குபீரென்று உள்ளே பாய்ந்து வந்தது புதிய காற்று.

எதிர்வீட்டு ஜன்னலை பார்த்தாள். முகத்தில் ஒரு வாரத்திய தாடி தெரிய அவன் ஜன்னலோரத்தில் காத்திருந்தான். வாடிக் கிடக்கும் முகம்.

காதலுக்கு இந்த பாஷை போதாதா? அவள் ஏன் இங்கு வரவில்லை? என்று கோபமாக ஜாடையில் கேட்டான்.

இவள் பதில் ஏதும் சொல்லாமல் கீழே இறங்கி வந்தாள்.

"அப்பா அவங்க கிட்ட சொல்லுங்க. நினைத்தபடி ஒரே பந்தல்ல ரெண்டு கல்யாணத்தையும் முடிச்சுடலாம்னு சொல்லுங்க. நான் அவங்களோட பெரிய பையன கட்டிக்க தயாரா இருக்கேன்."

தந்தை திகைத்தார்.

இவளுள் எங்கோ ஒரு குயில் கூவியது.

விமலா ரமணி <vimalaramanis@gmail.com>



ஏசி வாங்கி, உங்கள் வீட்டை
குளு குளு வீடாக மாற்றுங்கள்...!
மாதம் EMI ₹1999 முதல் | முன்பணம் இல்லை*
SATHYA
SPREADING HAPPINESS
SATHYA
SPREADING HAPPINESS
குளு குளு
AC OFFER
Cash Back
₹7000*
வரை
Cash Back
₹5000*
வரை
HDB Cash Back
₹3000*
வரை
₹5000*
வரை
Brand Cash Back
Installation
இலவசம்*
Maximum
Exchange Offer
(on any condition)
LG
DAIKIN
VOLTAS
BLUE STAR
GENERAL
Haier
HITACHI
LLOYD
Panasonic
Scan to know Prices, Offer details & to Shop Online
www.sathya.store
Whatsapp: 99166 98985 or Call: 88805 98985
For corporate bookings or bulk orders, mail us: corporatesales@sathya.email
Now
200+
Showrooms

# கி.ரா.வின் 'கலைக் களஞ்சியம்'

## ம.பெ. சீனிவாசன்

வழக்குச் சொல்லகராதி - கி. ராஜநாராயணன்; பக். 304, விலை ரூ. 350;
வெளியீடு: அன்னம் / அகரம், 1 நிர்மலா நகர், தஞ்சாவூர் - 613007;
மின்னஞ்சல்: annamakaram@gmail.com; தொலைபேசி: +91 94431 59371,
+91 99430 59371

வடவேங்கடத்திற்கும் அப்பால் அயல்மொழி வழங்கிய நாடுகளை 'மொழிபெயர்தேஎம்' என்று குறுந்தொகை (11:8), அகநானூறு (67:12; 211:8), ஐங்குறுநூறு (321:4) ஆகிய சங்கநூல்கள் குறிக்கின்றன. இதே செய்தி மக்களின் பேச்சு மொழியில், 'தேசந்தோறும் பாஷைகள் வேறு' என்று ஒரு பழமொழியாக வெளிப்பட்டது.

இக்காலத்தில் தமிழில் வட்டார வழக்கில் எழுதப்படும் சிறுகதைகளும் புதினங்களும் ஒருவகையில் இப்பழமொழியையே நமக்கு நினைவூட்டுகின்றன. கொங்கு நாடு, நாஞ்சில் நாடு, நடு நாடு, கரிசல் காடு எனத் தமிழ் நாட்டின் பல்வேறு பகுதிகளைக் கதைக்களமாகக் கொண்ட படைப்புகளில் கையாளப்படும் வழக்குச் சொற்கள் அந்தந்த வட்டாரங்களுக்கே உரியவை. வேறு பகுதியைச் சார்ந்த வாசகர்களுக்கு அவை புதியவை; பொருள் புரியாதவை.

கரிசல் காட்டு எழுத்தாளரான பா.செயப்பிரகாசம், 'பறவைகளின் கெச்சட்டம்' என்று எழுதும் போது பறவைகளின் ஆரவாரத்தைத்தான் 'கெச்சட்டம்' என்று குறிப்பிடுகிறார் என்பதை எளிதிற் புரிந்துகொள்கிறோம். ஆனால், அவரே, "நானும் என் நண்பரும் முருசல் பாத்தியில் வளர்ந்த பயிர்கள் அல்ல" என்று எழுதுகையில், 'அது என்ன முருசல் பாத்தி?' என்று புரியாமல் தடுமாறுகிறோம். கி. ராஜநாராயணனின் 'வழக்குச் சொல்லகராதி'யில் (தொகுதி 9, அன்னம், தஞ்சாவூர், 2022) இதற்கு விடை கிடைக்கிறது. 'தோட்டத்தில் பாத்தி அமைக்கும் போது எந்த வரிசையிலும் சேராத பாத்தி' (ப. 381-382) என்று இதற்குப் பொருள் தருகிறார் அவர். 'பாத்தி' என்பது வள்ளுவர் காலத்திலிருந்தே வழக்கில் இருந்து வரும் (குறள் 465;718) ஒரு சொல். ஆனால், 'முருசல் பாத்தி'யோ கரிசல் காட்டு மக்களின் பேச்சு வழக்கில் மட்டுமே வாழ்வது. எனவேதான், 'ஒவ்வொரு வட்டாரத்தின் வழக்குச் சொற்களுக்கும் அகராதிகள் உருவாக்கப்பட வேண்டும்' என்று கனவு கண்டார் கி. ராஜநாராயணன். 'அவையனைத்தும் ஒருங்கிணைக்கப்பட்ட - வழக்குச் சொல் பேரகராதி உருவாக வேண்டும்' என்பதும் (பதிப்புரை) அவர் விருப்பம்.



இனி, இந்த வழக்குச் சொல் இன்ன வட்டாரத்திற்கு உரியது என்று வரையறுப்பதிலும் சிக்கல் உண்டு.

கி.ரா. தம்முடைய அகராதியில் (ப.186) காட்டும் 'சங்காத்தம்' (உறவு அல்லது பழக்கம் என்று பொருள்) கண்மணி குணசேகரனின் 'நடுநாட்டுச் சொல்லகராதி'யிலும் (தமிழினி, 2007, ப.164) இடம்பெற்றுள்ளது. அதற்கு அவர்கள் இருவரும் சொல்லுகிற பொருளும் ஏறக்குறைய ஒரே மாதிரிதான். அவ்வளவாக வேற்றுமை இல்லை.

"உன் சங்காத்தமே இனி வேண்டாம்" - இது, கி.ரா.

"அவ சங்காத்தமே வேணான்னுதான் வுட்டுக் கடாசிட்டு வந்துட்டன்" - இது, கண்மணி குணசேகரன்.

இப்படிப்பட்ட 'ஒற்றுமை'களைக் கி.ரா.வின் கவனத்திற்குக் கொண்டு சென்றபோது அவர் சொன்ன பதில் இதுதான்: "அதுக்கு நான் என்ன செய்ய? எங்கள் வட்டாரத்தில் வழக்குச் சொல்லாக அது இருக்கே." (அவரது 'அகராதி', ப.534).

ஒரு சொல்லே அந்தந்த வட்டாரங்களில் வெவ்வேறு பொருள்களில் வழங்குவதுமுண்டு. 'கோளாறு' என்பதற்கு, 'கோளாறான ஆளு' (கோளாறு - தவறு) என்றும், 'நல்ல கோளாறுக்காரன் (கோளாறு - யோசனை; கவனம்) என்றும் இரண்டு விதமாகப் பொருள்



புரிந்துகொள்ளப்படுவதைக் கி.ரா. தம்முடைய அகராதியில் (ப.184) எடுத்துக் காட்டியிருக்கிறார். கவிஞர் கண்ணதாசன் திரையிசைப் பாடலொன்றில், ‘அக்கோளாறு பண்ணாம கிட்ட வந்து கொஞ்சுங்க சினிமாவில் கொஞ்சுராப்புல’ என்று தென்பாண்டி நாட்டுக் கிராமத்துக் காதலி கூறுவதாகப் பாடியிருப்பதும் தேனி வட்டாரத்தில் ‘கோளாறாக (கவனமாக)ப் போய்வா’ என்று கூறும் வழக்கம் இருப்பதும் இதற்கேற்ற உதாரணங்களாகும்.

நடுநாட்டுச் சொல்லகராதியில் ‘கோளாறு’க்கு இடமில்லை. இப்பேச்சு வழக்கு அங்கே இல்லை போலும்.

கி.ரா. தம்முடைய அகராதியில் வழக்குச் சொற்களுக்கு மட்டும் இடமளிக்கவில்லை. சொலவடைகளையும் பழமொழிகளையும் மரபுத் தொடர்களையும் கிராமிய விளையாட்டுகளையும் நெல் முதலான பயிர் மற்றும் பயறு வகைகளையும் ஆடு, மாடுகள் பற்றிய நுட்பமான தகவல் குறிப்புகளையும் காற்று வகைகளையும் ஆபரணங்களையும் கிராம மக்களின் நம்பிக்கைகளையும் கூடியமட்டிலும் பதிவு செய்திருக்கிறார். அங்கங்கே தேவையான விளக்கமும் தருகிறார். குறிப்பாகப் பழமொழி உள்ளிட்ட சொலவடைகள், மரபுத் தொடர்களின் பொருளைக் காட்சிப்படம் போல் கற்போர் மனத்தில் விரியச் செய்திருப்பது அருமையினும் அருமை.

பதச்சோறாகச் சில...

‘மைக்கருப்பு - மிகுந்த கருப்பு. மாப்பிள்ளை மொழுமொழுன்னு மைக்கருப்பு. பொண்டாட்டி பொட்டு வைக்கணும்னா உடம்பைத் தொட்டு வச்சிக்கலாம்’ (ப.393). அடர்த்தியான கறுப்பு நிறம் (Inky Darkness) வடிவழகுக்குரிய நிறமாக நம் கிராமத்து மக்களால் எப்படிக் கொண்டாடப்பெற்றது என்பதற்கு எடுத்துக்காட்டு இது. மேலும், ‘கண்டவர்கள் நெஞ்சிலே இருள்படியும் (பித்தேறச் செய்யும்) படியான திருமேனி’ என்று வைணவ உரையாசிரியர்கள் - நம்மாழ்வாரின் ‘மைப்படி மேனி’ என்னும் திருவிருத்தத்திற்குக்



கூறிய (65) அழகிய உரைப்பகுதியை இது நினைவூட்டுகின்றது. அதே நேரத்தில் பாமர மக்களின் மொழியில் படிந்திருக்கும் கவிதை நெஞ்சத்தையும் அடையாளம் காட்டுகிறது.

தமிழர்க்கே உரிய கறுப்பு நிறம் இன்றைய ‘சிவப்பு அழகா’ல் சிதைக்கப்பட்டதை வரலாற்று முறையில் விளக்கிப் பேசும் பண்பாட்டு அறிஞர் தொ.ப.வின் ‘கறுப்பு’ நிறம் பற்றிய கட்டுரையும் நம் நினைவுக்கு வருகின்றது.

இப்படி உயர்வு நவிற்சியாக, உருவகமாக, எடுத்துக்காட்டுபவையாக, உருக்காட்சியாக, வரலாற்றுப் புதையலாக, நையாண்டியாக அமைந்த வழக்குச் சொற்களும் தொடர்களும் இந்நூலில் வரிசை வரிசையாக அணிவகுத்து நிற்கின்றன. கைக்கெட்டும் நிலையில் கிடைக்கும் பேருதவியைப் ‘புழைக்கடைப்பச்சிலை’ என்றும்; ஆதரவற்ற நிலையை, ‘மிதிகொப்புமில்ல, பிடிகொப்புமில்ல’ என்றும்; எதற்கும் கையாலாகாதவனை, ‘நனைஞ்ச கோழி பிடிக்கிறவன்’ என்றும்; ஒன்றுமில்லாதவனை ‘வெறுவாக்லகெட்டபய’ (வெறும் வாய்க்கு வெற்றிலை கூட இல்லாத பயல்) என்றும்; சிறு தூறலாகப் பெய்தமழையை ‘வேட்டி நனையராப்ல பெய்த மழை’ என்றும்; வாழ்வில் நடப்பது நடந்தே தீரும் என்பதை, ‘வரும்விதி ராத்தங்காது’ என்றும்; பாமரர்கள் பேசியவை யாவும் பொருளாழம் உடையன என்று நாம் புரிந்துகொள்ளலாம்.

‘வாழ்க்கையில் வாய்ப்பெல்லாம் உயர்ந்த வசதி படைத்தவர்களுக்கே கிடைக்கும்’ என்பதை, ‘ஓசந்தகைப்பணியாரம்’ என்ற தொடர் மூலம் அவர்கள் சுருங்கச் சொல்லி விடுகிறார்கள். பணியாரம் வினியோகிக்கும் போது கூட்டத்தில் முதல் பணியாரம் உயரமான கைகளுக்குத்தானே முதலில் கிடைக்கும்!

> நெல்லுக்கு உமியுண்டு; நீர்க்கு நுரையுண்டு;
> புல்லிதழ் பூவிற்கு முண்டு (நாலடி.221)

என்பது கற்றோரின் செய்யுள் இலக்கியத்தில் இடம்பெறும் கருத்து. இதுவே பாமரர்களின் பேச்சு மொழியில், ‘கருப்பட்டியிலும் கல்லுக் கெடக்கும்’ (ப.121) என்று வெளிப்படுவதைக் காண்கிறோம். இனிக்கும் கருப்பட்டியில் இருக்கும் பொடிக் கற்களுக்காக அதை வேண்டாமென்று விலக்குவாருண்டோ?

அப்படித்தான் மனித வாழ்க்கையிலும்; நட்புடன்

பழகியவர்களிடம் காணும் சிறுகுறைகளுக்காக அவர்களை ஒதுக்கக்கூடாது என்பதை எவ்வளவு இலேசாகவும் இலாகவமாகவும் சொல்லுகிறது இச்சொலவடை!

நாம் என்றும் வாழ்வில் காணும் காட்சிதான் இதுவும்... வயதான தம்பதிகள்; நெடுங்காலம் எண்ணெயும் திரியுமாய் இணைந்து வாழ்ந்தவர்கள்; குடும்ப விளக்கினைச் சுடர்விட்டு ஒளிரச் செய்தவர்கள். கனிந்த பழம் காம்பிலிருந்து உதிர்ந்து விழுவது போல இவர்களில் யார் முந்துவார்கள்? நம்மால் முன்கூட்டிக் கணிக்க முடியுமா? 'சமத்கார'மாக 'ஐயஉவமை' எனும் அணி நயம்பட இதற்கு விடைசொல்கிறது கி.ரா.வின் வழக்குச் சொல்லகராதி.

'எண்ணெய் முந்துதோ? திரிமுந்துதோ?' (ப. 79)

வாய்மொழிகளின் வழியாகவே எழுத்துஇலக்கியம் கால்கொண்டது என்பதை நிறுவும் காலம் இது. இந்நிலையில் தமிழர்களின் வாழ்வியல் மற்றும் பண்பாட்டுக் கூறுகளை உள்ளடக்கிய இவ்வழக்குச் சொல்லகராதி தனிக்கவனம் பெறுவதற்கு உரியது.

இத்தகைய சிறப்புக்களைக் கருதியே பிறவிக் கவிஞரான மீராவும் 1982இல் இதன் முதற்பதிப்புக்கு எழுதிய அறிமுகவுரையில், "நாமும் ஏன் சுத்தப் பட்டிக்காட்டானாக இருந்திருக்கக் கூடாது" என்று ஆதங்கப்பட்டார். இவ்வகராதியைப் படிக்கும் ஒரு சில வாசகர்க்கும் இவ் - ஆதங்கம் ஏற்படக்கூடும்.

மொத்தத்தில் தமிழ் மக்களின் சமூகப் பண்பாட்டு ஆவணமாகத் திகழும் இந்நூலை ஒரு கலைக்களஞ்சியம் எனலாம். காலமெல்லாம் போற்றிக் காக்க வேண்டிய பெருநிதியம் இது.

# மாற்றத்தைத் தொடர்ந்து

**விட்டல்ராவ்**

1960-70களில் ஒரு நாளைக்கு தோராயமாக நூறிலிருந்து இருநூறு வரை தொலைப்பேசி பழுதுக்கான புகார்கள் பெறப்படும். இது தொலைப்பேசி இணைப்பகங்களின் கொள்ளளவுக்கு தக்கவாறு கூடும் குறையும்.

'எக்ஸ்சேஞ்சு கொள்ளளவு' என்பது (Exchange Capacity) அந்தந்த தொலைப்பேசி இணைப்பகத்தின் கீழ் இயங்கும் மொத்த தொலைப்பேசிகள், சிறப்பு சர்க்யூட்கள் (Special Circuits), டெலெக்ஸ்கள் ஆசியவற்றின் மொத்த எண்ணிக்கையை வைத்து கணிப்பதாகும். 200,300 பழுதுகளை பரிசோதிக்கையில் பெரும்பாலும் எக்ஸ்சேஞ்சுக்கு வெளியே கம்பங்கள் வழியே ஓடும் 'ஓவர்ஹெட்' கம்பிகளில் பழுதிருக்கலாம். தொலைப்பேசி கருவிக்குள்ளோ, பூமிக்கடியில் புதையுண்ட கேபிள்களிலோ பழுது இருந்துவிடக்கூடும். கொஞ்சம் அரிதாக எக்ஸ்சேஞ்சுக்குள்ளும் பழுது இருந்து விடலாம்.

எக்ஸ்சேஞ்ச் கொள்ளளவு என்று பார்த்தால் சென்னையில் மிகப்பெரிய ஸ்ட்ரோவ்ஜர் எக்ஸ்சேஞ்சு பூக்கடை தொலைப்பேசி இணைப்பகம். இது மத்திய தொலைத் தொடர்பகம் எனப்பட்டது. இதையடுத்து அளவில் பெரியது பின்னாளில் அண்ணாசலை இணைப்பகம் என்றான பழைய மவுண்ட்ரோடு எச்ஸ்சேஞ்சு. அடுத்தபடியாக மாம்பலம், மைலாப்பூர், செயிண்ட் தாமஸ் மவுண்ட் எக்ஸ்சேஞ்சுகள் எனலாம்.

எக்ஸ்சேஞ்சுக்குள் ஒரு தொலைப்பேசியின் பழுது இருப்பது எனும்போது, ஒவ்வொரு தொலைப்பேசியும் மூன்று முக்கிய பகுதிகளில் செயல்படுகிறது. பரிசோதனைப் பகுதியில் [Test Desk] இருக்கும் எம்.டி.எப். என சுருக்கமாய் குறிப்பிடப்படும். Main Distribution Frame, அதைத் தாண்டி ஐ.டி.எஃப் எனும் Internal Distrbution Frame, மற்றும் அதிமுக்கிய பகுதியான சுவிட் ரூம். இந்த சுவிட்ச் ரூம் என்பது அகன்று நீண்ட பெரிய கூடம். இங்கே வரிசையாக நூல் நிலையத்துள் புத்தக அலமாரிகள் இருப்பது போல் சுவிட்சுகள் [செலக்டர்கள்] பொருத்தப்பட்ட Racks நிற்கும். ஒவ்வொரு வாடிக்கையாளரின் ஒவ்வொரு தொலைப்பேசிக்கும் ஒரு ஜோடி புதையுண்ட கேபுள் கம்பி, கம்பங்கள் வழியே ஓடும் கம்பி, சுவிட்ச் ரூமில் ஒரு தனி சுவிட்ச் மற்றும் அழைப்புகளைக் கணிக்கும் மீட்டர் ஆகியவை அமைக்கப்பட்டிருக்கும். இவற்றில் சுவிட்ச் ரூம் மீட்டரும் எக்ஸ்சேஞ் சுக்குள் இருப்பவை.



தொலைபேசிகள் மிகவும் குறைந்தளவு (70 வோல்ட்) மின் சக்தியைக் கொண்டுதான் இயங்குபவை. இந்த இயக்கத்துக்கான மின் சக்தி சுவிட்சுகளை இயக்க, புதையுண்ட கேபிள்கள் வழியாக கம்பங்கள் வழியே கம்பங்களில் ஓடும் கம்பிகளில் பாய்ந்து, வாடிக்கையாளரின் வீட்டுக்குள்ளிருக்கும் தொலைப்பேசி வரை செல்லுகிறது. தொலைப்பேசியின் ஒலி வாங்கியை (ரிசீவர்) எடுத்து காதில் வைத்தவுடன் நமக்குக் கேட்கும் பர்ர்ரென்ற டயல் ஒலி முதல், எங்கேஜ் ஒலி வரையுள்ள ஒலிகளை உண்டாக்குவது ரிங்கர் எனும் சாதனம். இது பாதுகாப்பான தனியறையில் நிறுவப்பட்டிருக்கும். இந்த ரிங்கருக்கு ஏதேனும் கேடு வந்து சுழலாது நின்றுவிட்டால் அந்த எக்ஸ்சேஞ்சின் கட்டுப்பாட்டிலிருக்கும் ஆயிரக்கணக்கான தொலைப்பேசிகளும் செத்துப் போய்விடும்.

பகல் முழுக்க நேரடி மின்சக்தியாலும், இரவு முழுக்க பாட்டரியாலும் இயக்கும். பாட்டரிகள் எக்ஸ்சேஞ்சிலுள்ள பாட்டரி அறையினுள் அமைந்திருக்கும். எக்ஸ்சேஞ்சின் சகலமும் இரவானதும் தானாகவே பாட்டரி சக்திக்கு மாறிக்கொள்ள வகை செய்யப்பட்டிருக்கும். இப்படியிருக்க பகலில் நேரடி மின் சக்தியில் ஏற்ற இறக்க (Fluxuation] தொந்தரவு ஏற்பட வாய்ப்பிருக்கும். மிக அதிகளவு மின்சாரம் திடீரென வந்தால் வாடிக்கையாளரின் தொலைப்பேசிக்கான சுவிட்சு முதலானவை பழுதடையவும், எரிந்தே நாசமடையவும் வாய்ப்பிருக்கும். அதைத் தடுக்கும் விதமாய் பரிசோதனைப் பகுதியிலுள்ள எம்.டி.எஃப். பில் சில தடைகள் பொருத்தப்பட்டிருக்கும். அவை ஹீட்காய்ல் (Heat Coil] மற்றும் கார்பன் அரெஸ்டர்கள் (Carbon Arrestors) எனும் சின்னஞ்சிறு தடை சாதனங்கள். கூடுதல் மின்தாக்குதலால் ஹீட் ஃப்யூஸ் ஆகி, மின்சாரம் மேற்கொண்டு எக்ஸ்சேஞ்சு சுவிட்ச் அறைக்குள் போகாமல் தடுக்கப்பட்டுவிடும். ஹீட் காய்லை மாற்றிப் பார்க்கலாம். கார்பன் அரெஸ்டர் என்பது தாயம் விளையாடும் சிறு பகடை போன்று இறுகின கரியாலான இரு சிறு சாதனங்கள். இவற்றின் இடையிலுள்ள மைகா (காகாபொன்) துண்டு கூடுதல் மின்சாரத் தாக்குலால் துளைக்கப்பட்டுவிடும். கார்பனை மாற்றினால் சரியாகலாம். அப்படியும் எக்ஸ்சேஞ்சுக்குள் பழுது சுவிட்சு யூனிட்டிலோ, அல்லது 'Bank' எனும் முக்கிய சாதனத்திலோ இருக்கக்கூடும்.

பாங்க் பழுது [Bank Fault] என்பது ஸ்விட்சு ரூமில் ஏற்படும் பழுதுகளில் மிகப் பெரியதும் சிக்கலானதுமான கோளாறு. இதை



எல்லா டெக்னிஷியன்களும் சுலபமாய் சரிபார்த்து நிவர்த்தியளிக்கமுடியாது.பேங்க்பழுதைஓரிருவர்தான் சாமர்த்தியமாக பார்ப்பார்கள். இவையில்லாமல் எக்ஸ்சேஞ்சுக்குள்ளேயே ஏற்படும் பழுதுகளில் எளிமையானதும் சீராக்குவதில் சிரமமில்லாததும் அதே சமயம் சீராக்கும் வரை தொலைப்பேசியை இயங்காமல் செய்யும் பழுது ‘ஹெல்ட்அப்’ [Held up] என்றழைக்கப்படுவது.குறிப்பிட்டதொலைப்பேசியின் ரோட்டரி செலக்டர்கள் சில சமயம் சுற்றாமல் நின்றுவிடும். இந்த ஹெல்ட் அப் நிலையில் தொலைப்பேசிகள் பேச்சு முச்சு இல்லாமலிருந்தது.

60-70களில் ஒரு நாளைக்கு ஓர் இணைப்பகத்தின் மொத்த புகார்களில் ஐந்தோ ஆறோதானிருந்துவந்தது. போகப்போக, நாளாக நாளாக எக்ஸ்சேஞ்சிலுள்ள ஸ்விட்சுகளுக்கு வயதாக வயதாக, ஹெல்ட் அப் பழுதுகள் அதிகரித்து வந்தன. எல்லா ஸ்ட்ரோவ்ஜர் வகை தொலைப்பேசி இணைப்பகங்களும் ஏர்கண்டிஷன் வசதி கொண்டிருந்தவை, [Centralised Ac]. இதுவும் வயதாகவும் செயல்திறன் குறையத் தொடங்கிற்று. சுவிட்சு ரூமுக்குள் மிக நுண்ணிய தூசு சேர தொடங்கியது.இவையெல்லாம் ஒருங்கிணைந்து செலக்டர்களிலுள்ள (சுவிட்சுகள்) நுட்பமான பாகங்களில்சலனங்களை அவ்வப்போதுதடுத்துநிறுத்த வைத்தன. எனவே, ஹெல்ட் அப் நிலை ஏற்பட்டது. அது உடனுக்குடன் சரிபார்க்கப்பட்டு வந்தது. காலப் போக்கில் சுவிட்சு ரூம் இயந்திரங்கள் பழையதாக பழையதாக தேய்மானம் (Wear And Tear] அதிகரித்து, ஒரு நாளில் ஒரு சமயத்தில் ஐம்பது முதல் நூறு தொலைப்பேசிகள் Mass Held Upâன்று குறிப்பிடப்பட்ட நின்று போன நிலையில் சிக்கி, வாடிக்கையாளர்கள் மிகவும் அவஸ்தைக்குள்ளானார்கள். மீட்டர்களும் இதே காரணங்களால் நின்றுபோய்க்கொண்டிருந்தன. இது வாடிக்கையாளர்களின் அழைப்புகள்-கணக்கீட்டை கணிப்பை பாதித்து ஏடாகூடமாக அதிரிச்சிமிகு பில்களை அனுப்பி வைக்கப்பட்ட துயர கதையாயிற்று. நீதிமன்றம் வரை புகார்கள் போய்க் கொண்டிருந்தன.தொலைப்பேசி உயர் அதிகாரிகளை அனுமதிக்கப்பட்ட நேரத்தில் வாடிக்கையாளர்கள் அடிக்கடி போய் பார்த்து தம் குறைகளை சொல்லுவதும், கடிதங்கள் மூலம் புகாரளிப்பதும் தினசரி நிகழ்வாயிற்று. இதற்கெல்லாம் விரைவில் ஒரு தீர்வு ஏற்படாதாவென்று வாடிக்கையாளர்களோடு இலாகா ஊழியர்களும் கவலை தெரிவித்ததோடு விடியலை எதிர்பார்த்திருந்தனர். இந்த சமயம் அமெரிக்கா போன்ற நாடுகளில் தொலைத்தொடர்பு நிலைமை வேகமாக மாறி வந்தது. எலெக்ட்ரானிக்ஸ் வகைமைக்கு அங்கு மாறியிருந்தது, இது உலக நாடுகளில் வேகமாக பரவிக்கொண்டு வந்தது.

எலக்ட்ரானிக்ஸ்தொலைத்தொடர்புவகைமையில் நல்ல தேர்ச்சியும் ஞானமும் அனுபவமும் பெற்றிருந்த

தொலைத்தொடர்பு பொறியியல் வல்லுனரும் அறிவுஜீவியுமான சாம் பித்ரோடா எனும் மனிதரின் வருகை ஏற்பட்டது, அவர் இந்திய தொலைத் தொடர்பு அமைப்பை உலக அளவுக்கு தரத்துக்கு மாற்றியமைத்து உயர்த்திக் காட்ட ஏராளமான திட்டங்களை முன்வைத்தார். அதி நவீன தொழில் நுணுக்க வகைமையை, நம்நாடு தொலைத்தொடர்பு தழுவிக்கொள்ளும் முக்கிய வழிகாட்டியானார்.

சாம் பித்ரோடாவின் பரிந்துரையின் வழிகாட்டலிலும் தொழில்நுணுக்கமேதைமையுடனும், சர்வதேச தொலைத்தொடர்பு நிறுவனங்களோடு தொடர்புகொண்டு இணைந்து அவற்றின் கூட்டு அமைப்பாக அதி நவீன எலெக்ட்ரானிக்ஸ் தொலைத் தொடர்பகங்கள் உருவாயின. அல்கெடால், ஈடென்பி, இடபுள்யூஎஸ் என்ற பிரான்ஸ், இங்கிலாந்து மற்றும் ஜெர்மனி ஆகிய நாடுகளின் வலுவான தொலைதொடர்பு நிறுவனங்கள் அனுமதிக்கப்பட்டு அவை மின்மயமான நவீன எலெக்ட்ரானிக்ஸ் எக்ஸ்சேஞ்சுகளை விரைந்து அமைத்து கொடுத்தன. பழைய ஸ்ட்ரோவ் ஜர் ரக சுவிட்சுகளும் க்ராஸ்பார் ரக இயந்திரங்களும் அகற்றப்பட்டு, தொலைத்தொடர்பு அமைப்பும் சாதனங்களும் நூதனமான எலெக்ட்ரானிக்ஸ் மயமாயின். உயர் அதிகாரிகளில் தேர்ந்தெடுக்கப்பட்ட பலரை மேற்சொன்ன அயல்நாட்டு நிறுவனங்களின் தலைமை மையங்களுக்கு அரசு அனுப்பிவைத்து அங்கே குறுகிய காலப் பயிற்சியும் பெற வைத்தது.

லைன்மேன் ஊழியர்களை உடனுக்குடன் தொடர்புகொண்டு அவர்களை உள்ளங்கையில் வைத்திருப்பது, அவசர செய்திகளை பரஸ்பரம் உடனுக்குடன் பகிர்ந்துகொண்டு, வாடிக்கையாளர்களின் நீண்ட நாட்களாய் நிலுவையிலிருக்கும் குறைகளின் சுமையைக் குறைக்கும் முகமாய் எல்லா லைன் மேன், ஜேஇ போன்றோருக்கு அன்றை நாளில் புதியதாக வந்திருந்த ‘பேஜர்’ [Pager] சாதனத்தை விநியோகித்தனர்.

பேஜர் என்பது சிறு செல்போன் வடிவிலானது. அதில் பேச முடியாது. குறுஞ் செய்திகளை தகவல்களை பேஜரின் தட்டெழுத்துப் புறத்திலுள்ள எழுத்துக்களையும் எண்களையும் விரலால் தடவித் தட்டி ஒரு பேஜரிலிருந்து இன்னொரு பேஜருக்கு அனுப்பலாம். செல்போன் வந்ததையடுத்து பேஜர் மறைந்து போயிற்று.

எலெக்ட்ரானிக்ஸ் வகைத் தொலைப்பேசித் தொடர்பகங்கள் அமைக்கப்படுகையில் பெரிய எக்சேஞ்சுகள் ஒன்று இரண்டாக மூன்றாக எல்லாம் பிரிக்கப்பட்டு, புதிய புதிய சிறுசிறு தொடர்பகங்கள் ஏற்பட்டன. அவற்றின் கீழ் இயங்கும் தொலைப்பேசிகளின் எண்கள் மாற்றப்பட்டன. எலெக்ட்ரானிக்ஸ் முறைமை தொலைத்தொடர்பில் அதி வேகமாய் எழும்பி பரவியது.

முன்பு பழைய வகையில் புதிய தொலைப்பேசி இணைப்புக்குவிண்ணப்பித்துடெபாசிட்தொகையைக் கட்டிவிட்டு இணைப்பை எதிர்பார்த்து தேவுடு காக்கவேண்டும். ஓஒய்டி (OYT-Own Your Telephone] என்ற வகை தொலைப்பேசிக்கான டெபாசிட் தொகை மூவாயிரம் ரூபாயை செலுத்திவிட்டு ஓராண்டுக்கும் மேலாகக் காத்திருந்ததும், நான் ஓஒய்டி [Non-OYT]க்கு ஆயிரம் ரூபாய் டெபாசிட் தொகை கட்டிவிட்டு ஐந்து ஆண்டுகள் இணைப்புக்காக காத்திருந்தவர்களும் அனந்தம். இந்த அவல நிலை எலக்ட்ரானிக்ஸ் எக்ஸ்சேஞ்சுகள் வரவும் வெகுவாகத் தளர்ந்தும், பிறகு இல்லாமலேயும் போனது. காத்திருப்போர் பட்டியில் சிறுத்து பிறகு இல்லாமல் போனது. ‘ஹெல்ட் அப்’ போன்ற எக்ஸ்சேஞ்சுகள் ஏற்பட்டு வந்து பழுதுகள் காணாமற் போயின. ஓரளவுக்கு வாடிக்கையாளர்களின் குறைதீர்ந்து நிம்மதி மூச்சுக்குத் திரும்பினர்.

அடுத்து சட்டு சட்டென்று சிறு சிறு பிராந்திய RLU (Remote Line Unit) மற்றும் RSU எனும் எக்ஸ்சேஞ்சுகள் பெரிய எச்ஸ்சேஞ்சுகளிலிருந்து, தம் தாய் எக்ஸ்சேஞ்சின் [Parental Exchange] கட்டுப்பாட்டிலிருந்தவாரே இயங்கும் விதமாக ஏற்பட்டன. சட்டென்று வாடிக்கையாளர்களின் அதுவரை மாறாதிருந்த தொலைப்பேசி எண்கள் மாறிக்கொண்டே இருந்தன. இந்த திடீர் திடீர் எண் மாற்றங்கள், வாடிக்கையாளர்களின் சுமுகமான தொலைப்பேசி இயக்கத்தைப் பாதித்தன. குழப்பங்கள் ஏற்பட்டன. மாற்றங்களுக்குத் தக்கவாறு தங்களை தயார்படுத்திக்கொள்ள வாடிக்கையார்களுக்கு பொறுமையும் யோசனையும் எல்லோருக்கும் ஒரே மாதிரியில்லை.

வாடிக்கையாளர்கள் பலரும் தங்களுக்கான தங்கள் விருப்பப்படி அமையக்கூடிய தொலைப்பேசி எண்களை எக்ஸ்சேஞ்சுகளில் இருந்து வாங்குவதில் முந்திக்கொண்டு ஓடினர். ஒருவருக்கு, தமக்கான தொலைப்பேசி எண்களை ஒன்றாகக் கூட்டிப் பார்த்தால் இப்படியான கூட்டுத்தொகை இருக்கவேண்டும் ஒற்றைப் படையில் முடிந்திருக்க வேண்டும் என்று சிலரின் விருப்பம். இரட்டைப் படையில் முடிந்திருக்க வேண்டும் என்று வேறு சிலரின் விருப்பம். எளிதில் நினைவில் நிற்குமாறு அமையும் விதமாய் தொலைப்பேசி எண்கள் இருக்குமாறு கேட்பார்கள் சிலர். சிலர் நியூமராலஜியை துணை சேர்த்துக்கொண்டு அதற்கொப்ப தமக்கான தொலைப்பேசி எண்ணை தேர்ந்தெடுப்பார்கள். இவ்வாறு வாடிக்கையாளர் தேர்ந்தெடுத்து வேண்டும் தொலைப்பேசிகளை தொலைப்பேசி இலாகாவில் ‘ஃபேன்ஸி எண்கள்’ [FANCY NUMBERS] என்று அழைப்பார்கள் இந்த எண்கள் கொண்ட பட்டியலை மூத்த ஊழியர் ஒருவரின் கட்டுப்பாட்டில் விட்டிருப்பார்கள். போகப் போக அந்த ஊழியரை வாடிக்கையாளர்கள் ஃபேன்ஸி எண்களுக்காக அணுகுவதில் ஊழல் தலைதூக்கிற்று. ஒரு எண்ணை

வாங்குவதில் லஞ்சம் நிலவுவதாக புகார் வரவும் பட்டியல் அதிகாரிக்கு கைமாறியது. ஆனால், அதிகாரி மீதும் குற்றப் பத்திரிகை வாசிக்கப்பட்டதையடுத்து தொடர்பகத்திலிருந்தே தொடர்புகொண்டு நான்கைந்து எண்களை தெரிவித்து தேர்ந்தெடுக்கச் சொல்லுவார்கள்.

சிறிய சிறிய எக்ஸ்சேஞ்சுகளாக ஐந்தாயிரம் வாடிக்கையாளர்களின் தொலைப்பேசிகளைக் கொண்ட ஆர்.எஸ்.யூ மற்றும் ஆர்.எல்.யூ வகை எலெக்ட்ரானிக் எக்ஸ்சேஞ்சுகள் தோன்றிக்கொண்டே வந்தன. இந்த சிறிய அளவு எக்ஸ்சேஞ்சுகள் எண்ணிக்கை பெருகவும், தொலைப்பேசி இலகாவுக்குப் புதிய கட்டிடங்கள் தேவைப்பட்டன. எல்லா புதிய எக்ஸ்சேஞ்சுக்கும் சொந்த கட்டிடம் கிடையாது. புதிய கட்டிடங்களைக் கட்டுவது கால விரயம். எனவே, வாடகைக்கு கட்டிடங்கள் தேடினர். நிறைய தனியார் விடுகளை வாடகைக்கு எடுத்து சிறிய வகை எக்ஸ்சேக்சுகளை அமைத்தனர். இந்த மாற்றங்களினால் பெரிய எக்ஸ்சேஞ்சுகளின் தொலைப்பேசிகளின் கொள்ளளவு மாறியது அல்லது குறைந்தது. தொலைப்பேசி இணைப்பகத்தில் இயங்கும் தொலைப்பேசிகளின் எண்ணிக்கைக்கு ஏற்றார்போல அல்லது எக்ஸ்சேஞ்சு கொள்ளளவுக்கு ஏற்றபடிதான் ஊழியர்கள் அமர்த்தப்படுவார்கள். அதிக தொலைப்பேசிகள் அதிக ஊழியர்கள்; தொலைப்பேசிகள் குறைந்தால்- வேலைப்பளு குறைவதால் ஊழியர்களையும் குறைப்பார்கள். எனவே, ஊழியர்கள் திடீரென உபரியாக நின்றனர். ஒரே சமயத்தில் ஊழியர்கள் உபரியாக நிற்கவும் அவர்களை எந்தெந்த பணியிலோ அமர்த்த வேண்டியதா யிற்று. ஊழியர்கள் குறையவும் (உபரிகளாய் வேற்றிடங்களுக்கு தூக்கப்பட்டபின்) காண்டீன் எடுக்கப்பட்டது. உபரியாய் போன ஊழியர்கள் கிட்டதட்ட ஒரு மாத காலம் எந்த வேலையுமின்றி வருவது, வருகைப் பதிவேட்டில் கையெழுத்திட்டுவிட்டு உட்காருவது, நாலைந்து பேராக சேர்ந்து தேநீருக்கு போய்விட்டு வருவது, போவதுமாய் கழிந்தது. ஒரு கட்டத்தில் எதாவது வேலை இருக்கிறதா என்று கேட்டு வாங்கவேண்டிய நிலைக்கு வருகையில், 'வாடிக்கையாளர் சேவை மையங்கள்' திறக்கப்பட்டு இந்த உபரிகள் அனைவரையும் அங்கே அனுப்பி வைத்தனர்.

நாமாகவே வெளியூர் தொலைப்பேசி (STD) எண்களை டயல் செய்து தொடர்புகொண்டு பேசும் வகையில் வசதிகள் ஏற்பட்டன். ஒவ்வொரு ஊரின் தொலைப்பேசி எண்களையும் அவற்றக்கென அமைந்த STD-Code எண்ணை அடித்து அவ்வூர் தொலைப்பேசி எண்ணை தொடர்புபெற்று உரையாடுவது மாபெரும் கொடை பேறு என்றானது. அதையொட்டி ஒருவரின் தொலைப்பேசியில் உள்ள STD நிலையை ஒருசில எண்களை டயல் செய்து பூட்டி வைக்கவும், வேண்டும்போது திறந்து வைக்கவும் வசதியாக 'அலிபாபா கதவை திறக்க வைக்கவும் முடவும் ஓதப்பட்ட வாசகம் போல Dynamic Locking வசதி செய்துதரப்பட்டது. அது அமுலுக்கு வருமுன் நாறு ஆண்டுகளாய் இருந்து வந்த டிரங் புக்கிங் (Trunk Booking] முறை முடிவுக்கு வந்தது.

சென்னை பூக்கடையிலிருக்கும் போன்ஹவுஸ் வளாகத்தில்தான் மாடியில் டிரங்க் புக்கிங் பகுதி இருந்தது. மகளிர் மயமாக்கப்பட்டிருந்த இரு இடங்கள் சிறப்புப் பிரிவு எக்ஸ்சேஞ்சு (Special Service Exchange], மத்திய டிரங்க் எக்ஸ்சேஞ்ச் [Central Trunk Xse] மற்றும் வெளிநாட்டு அழைப்புகளுக்கான எக்ஸ்சேஞ்ச் [Overseas Taunk Call Xse] என்பவை அவை எந்த வெளியூர், நாடுகளின் தொலைப்பேசிகளோடும் இங்குள்ள ஆபரேட்டரின் உதவியுடன்தான் பதிவு செய்து, அவர்களின் முயற்சியில் தொடர்பு ஏற்படுத்திக் கொடுத்து ஒருவர் பேசமுடியும். பல தருணங்களில் பல்வேறு காரணங்களால் ஆபரேட்டரால் தொடர்பு ஏற்படுத்த முடியாமற் போய்விடுவதென்பது தவிர்க்க முடியாத பிரச்சினையாய் இருந்து வந்தது. STD வசதி ஏற்பட்டு பெறுகவும் ஆபரேட்டர்கள் தொடர்பு செய்து தரும் டிரங் புக்கிங் அதுவாக விடைபெற்றுக்கொண்டது. டிரங்க் புக்கிங் எக்ஸ்சேஞ்சில் இருந்த 800 பெண் ஊழியர்களை தொலைப்பேசியின் பிற பணியிடங்களுக்கு மாற்றி விட்டனர். ஒரு காலத்தில் ஆகோவென்றிருந்த டெலிபோன் ஹவுஸ் சோபையிழந்து தோன்றியது.

கூடவே புதிய தொழில் நுணுக்கம் பெருகி சகலமும் கணினி மயமாக்கப்படவே மேலும் ஊழியர்களின் தேவை குறைந்துவிட்டது. அந்த காலகட்டத்தில் வாடிக்கையாளர் சேவை மையங்கள் நாடு முழுக்கவும் திட்டமிடப்பட்டு திறக்கப்பிட்டன. ஒவ்வொரு இணைப்பகத்துக்கும் ஒரு சேவை மையம் அமைக்கப்பட்டது. அந்தந்த இணைப்பகங்களின் வாடிக்கையாளர் சேவை மையங்கள் அந்தந்த இணைப்பக வளாகத்திலேயே ஏற்படுத்தப்பட்டன. அல்லாமலும் வெளியில் வாடகைக் கட்டிடங்களிலும் நிறுவப்பட்டன. பொதுமக்கள் நேரிடைத் தொடர்புகொண்டு தொலைப்பேசி சேவை ரீதியாக சகலவித குறைகளையும் தெரிவித்து பரிகாரம் தேடி வந்தனர்.

அதுவரை தொலைப்பேசி இணைப்பகங்கள், அலுவலகங்கள், பண்டக கிடங்கு, கேபுள் கிடங்கெங்கும் பாதுகாப்புக்கென 24 மணிநேரமும் இலாகாவே நியமித்து வந்த கேட் மேன், சௌகிதார் என்பவர்களை நீக்கிவிட்டு இராணுவம், விமானப் படைப் பிரிவுகளில் பணியாற்றி ஓய்வு பெற்ற முன்னாள் வீரர்களை அதற்கென ஏற்பட்டிருந்த எக்ஸ் சர்வி ஸ்மென் பீரோ வழியாக 'செக்யூரிடிகள்' என்பாரை நியமித்தனர். இலாகாவின் சௌகிதார்களை லைன்மேன் ஊழியர்களாக மாற்றி பழுதுகளை துரத்திச் செல்ல வைத்தது இலாகா.

(தொடரும்)



# விதவை

ஆர். வத்ஸலா

பெற்றோர் நிச்சயித்த மாப்பிள்ளை
பட்டம் வாங்கிய உடன் திருமணம்
பார்க்க சுமார்
(இவளும்)
குணத்தில்
சுமாருக்கும் 'நல்ல'வுக்கும்
நடுவில்
சில கட்சிகளைப் போல

இருவரும் உழைத்து
குழந்தைகளை வளர்த்து
பறக்க விட்டு

தேவையான அளவு
பணத்துடன்
விதவையாகி
போதுமான அளவு
அழுது

பெரிய எல்சிடி திரைப்படம்
அறிதிறன் பேசியில்
பேரக் குழந்தைகளுடன்
புலனத்தில் சந்திப்பு
சர்க்கரை அளவை
கட்டுப்படுத்த
அக்கம்பக்கத்து
குடியிருப்புவாசிகளுடன்
வளாகத்தில் நடைபயிற்சி
நன்றாக இருந்தது
வாழ்க்கை

இவள் இந்த வீட்டிற்கு வந்தது முதல்
பக்கத்து வீட்டில்
தனியே வசித்த
பெரியவரும்
இவளும்
தினமும்
தத்தம்
துணைகளை பற்றி
குழந்தைகளை பற்றி
பகிர்ந்து கொள்வர்

இன்று
அவர்
இறந்து போனார்

போனாள்
கூட்டத்தோடு கூட்டமாய்
கைகுட்டையால் வாய் பொத்தி
அழுவது போல் பாசாங்கு செய்ய

பிணம் போனபின்
வீடு திரும்பி
குளித்து
சாப்பிடும் போது
தேம்பினாள்
புது விதவை போல

ஆர். வத்ஸலா <vatsala06@gmail.com>

published by PRABHU THILAAK published at No. 5, 5th Street, Soma sundaram Avenue, Shakti Nagar, Porur, Chennai 600116.
Owned by PRABHU THILAAK. printed by A. Chandran. Printed at Ayyanar offset, No. 10, Subbarao Nagar, Choolaimedu, Chennai 600094.
Editor : PRABHU THILAAK

